

மாற்று இருதயத்தோடு
மைமூன் பீவி எப்படி
இருக்கிறார்?

# கல்கி

KALKI 3.12.95 ரூ. 3.00

"என்னை 'மரம்வெட்டி' என்று
கொச்சைப்படுத்தாதீர்கள்!"

— டாக்டர் ராமதாஸ் பேட்டி



# பார்க் டவுன்
## பெனிபிட் பண்ட் லிமிடெட்

மத்திய அரசால் அங்கீகரிக்கப்பட்ட நிதி நிறுவனம். துவக்கம் 1985 Post Box No: 2806
223, தங்க சாலை, (கந்த கோட்டம் அருகில்) பார்க் டவுன், சென்னை-3 போன்: 582676, 564354

**கிளை அலுவலகங்கள்:**
2 கிழக்கு மாடவீதி, திருவான்மியூர், சென்னை-41 போன் 413582, 416417
P-995,இரண்டாவது அவென்யு, 12-வது மெயின்ரோடு ஜங்ஷன், அண்ணாநகர், சென்னை-40 போன் 6262656, 6280750



## பிக்சட் டிபாசிட்

| 46 நாள் | 90 நாள் | 6 மாதம் | 1 ஆண்டு | 2 ஆண்டு | 3 ஆண்டு | 4 ஆண்டு | 5 ஆண்டு * |
|---|---|---|---|---|---|---|---|
| 13% | 14% | 15% | 17% | 18% | 18.5% | 19% | 20% |

**21%** 5 வருடங்கள் ரூ.50,000/- அதற்கு மேலும்

## PB பாண்டு

| முதலீடு | காலம் | திரும்பப் பெறும்தொகை |
|---|---|---|
| ரூ.25,000 | 60 மாதம் | ரூ.70,000 |

## குழந்தைகள் கல்வி நலத்திட்டம்

L.K.G. முதல் கல்லூரி தொடக்கம் வரை
வைப்புத் தொகை ரூ. 5,100/-
3-ஆம் ஆண்டு நிறைவிலிருந்து தொடர்ந்து 12 ஆண்டுகள் ரூ.500/- பெறலாம். திட்ட டெபாசிட் காலத்திலிருந்து 16, 17-வது ஆண்டுகளில் தலா ரூ.1,000/- வீதமும், 18-ம் ஆண்டு துவக்கத்தில் ரூ.75,000/-ம் வழங்கப்படும்.
நலத்திட்டத்தின் 5% மாணவர்களுக்கு +2 அரசுத் தேர்வு மதிப்பெண் அடிப்படையில் ரூ.25,000/- பரிசாக ஒவ்வொருவருக்கும் நிதி நிறுவனம் வழங்கும்.
திட்டத்தின்பயனை உங்கள் மழலைச் செல்வங்களுக்கு வழங்கி மன நிம்மதி பெறுவீர்! மகிழ்ச்சி அடைவீர்!!

## கனகதாரா டிபாசிட்

ரூ.50,000/- முதலீடு செய்வீர்
10ஆம் ஆண்டு முடிவில் ரூ.50,000/- பெறுவீர்
அடுத்த 20ஆம் ஆண்டு முடிவில்
ரூ.1 கோடி பெறுவீர்

## காமதேனு மாபெரும் திரும்பப் பெறும் திட்டம்

| டிபாசிட் திட்டம் 15 ஆண்டுகள் | 5-ம் ஆண்டு நீங்கள் பெறும் தொகை | 10ம் ஆண்டு நீங்கள் பெறும் தொகை | 15ம் ஆண்டு பெறும் தொகை |
|---|---|---|---|
| Rs.6,320 | Rs.6,000 | Rs.6,000 | Rs.56,320 |

## வெகுமதி முதலீட்டுத் திட்டம் - II

ரூ.3450/- செலுத்துவீர்.
252 மாதங்கள் நிறைவில்
ரூ.2 லட்சம் பெறுவீர்.

**சேமிப்பு திட்டம் 10% P.a.**

## படிக்க - பாதுகாக்க

**ஸ்ரீலஸ்ரீ ஓங்காரநந்தா** அவர்கள் எழுதிய **வெட்டவெளி தியானம்** என்ற அருமையான நூலை அடக்க விலையில் வெளியிட்டுள்ளோம்.
**விலை ரூ. 20/- மட்டும்.** வாங்கிப் படித்து மகிழவும்.

**பிரதோஷ சிறப்பு** என்ற நூலை இலவசமாக வெளியிட்டுள்ளோம். பிரதி வேண்டுவோர் அலுவலகத்தை அணுகவும்.

**பென்ஷனர் நலத்திட்டம் 20% P.a.**
தொகை 10 ஆயிரமும் அதற்கு மேலும்: காலம் 1 ஆண்டு
வயோதிகர், விதவைகள், ஊனமுற்றோர், கல்வி மற்றும் அறக்கட்டளை பயன் பெறலாம்.

**தங்க நகை கடன்**
Rs. 3,000 PER 10 GRAM
வீடுகளின் பேரில் கடன் வழங்கப்படும்.
(உச்ச வரம்பில்லை)

நிர்வாக இயக்குனர் :
**P. பாலசுப்ரமணியம், B.Sc.**
முதன்மை அறங்காவலர்
கந்தகோட்டம், சென்னை - 3.

இயக்குனர் குழுத் தலைவர்:
**R. விவேகானந்தன், B.Com.**

❐ ரூ. 5/- செலுத்தி பங்குதாரர் ஆவீர். ❐ சேமிப்பே செழிப்புக்கு வழிகாட்டும் ❐ வெள்ளி விடுமுறை

'மைமூன் பீவியை அத்தனை சீக்கிரம் மறந்திருக்க மாட்டீர்கள். மாற்று இருதய அறுவை சிகிச்சைக்கு ஆளான நாற்பத்தைந்து வயதான பிளாட்பார வியாபாரி.

சென்ற மாதம் வடபழனி மெட்ராஸ் மெடிக்கல் மிஷனில் இருதயத்தசைகள் தடித்து, இருதயத்துக்கு ரத்த ஓட்டம் சீராகச் செல்லாமல், உயிருக்குப் போராடிக் கொண்டிருந்த இந்தப் பெண்மணிக்கு டாக்டர் கேஎம். செரியன் ஆபரேஷன் நடத்தியதும் சாலை விபத்தில் மூளைச்சாவு (Brain death) அடைந்த முப்பத்திரண்டு வயது ஹேமா என்கிற ஸ்டேட் பாங்க் ஊழியையின் இருதயத்தை மைமூனுக்குப் பொருத்தி, மருத்துவ சாதனை நிகழ்த்தப்பட்டதும் அத்தனை சுலபத்தில் மறக்கக்கூடியதல்ல.

இப்போது எப்படி இருக்கிறார் மைமூன் பீவி? ஆபரேஷனுக்குப் பின் அவரது இருதயம் ஒழுங்காக இயங்கத் தொடங்கி இருக்கிறதா? வேறொருவரின் இருதயத்தைத் தாங்கிக் கொண்ட அவரது உணர்வுகள் எப்படி இருக்கின்றன? தெரிந்து வர, மெட்ராஸ் மெடிக்கல் மிஷனுக்குச் சென்றோம்.

மூன்றாவது மாடி. அறை எண் 200. அமைதியின் ஆட்சி. ஏஸியின் ஜில். கண்ணாடிகளுக்கு வெளியே கார்களின் சீற்றம். உள்ளே இரண்டு கட்டில்கள். ஒரு சோபா. டீ.வி. பிரெஷர் பார்க்க, மருந்து கொடுக்க ஒரு நர்ஸ். குறிப்பு எழுத, கூடவே இருக்கப் பிறிதொரு நர்ஸ். அவ்வப்போது வந்து கவனித்துப் போகும் இருதயநோய் வல்லுநர், டாக்டர் பாஷா. அமைதியே உருவாய் கட்டிலில் சாய்ந்த நிலையில் மைமூன். நன்றாகப் பேசுகிறார். எழுந்து மெல்ல நடக்கவும் செய்கிறார். சட்டென்று உணர்ச்சிவசப்படுகிறார். கண்ணோரங்களில் எட்டிப் பார்க்கும் உவர்ப்பு முத்துக்கள்.

ஆபரேஷன் முடிந்து, ஐம்பத்தொரு நாள் ஆகிவிட்டதைச் சொன்ன சார்ட்டைக் காட்டி, "அபாரமான முன்னேற்றம்" என்று சந்தோஷப்பட்டார் டாக்டர் பாஷா. முன்னேற்றம் - மைமூன் உடல் நிலையில். பிரெஷர் நார்மலாக இருக்கிறது. டெம்ப்ரேச்சர் ஏதுமில்லை. சுகாதாரம் மட்

## இப்பத்தான் வாழ்கிறேன், சந்தோஷமா இருக்கேன்....'





• டாக்டர் செரியன்

டும் மிக அவசியம். வார்டுக்குள் அதனாலேயே யாரும் செருப்புப் போடக் கூட அனுமதிப்பதில்லை என்றார்கள்.

தமிழகத்தில் முதல் முறையாக நிகழ்த்தப்பட்ட சாதனை என்பதால், இந்தப் பரீட்சார்த்த ஆபரேஷனுக்கு உட்படுத்தப்பட்ட மைமூனுக்கான செலவுகள் அத்தனையையும் மெட்ராஸ் மெடிக்கல் மிஷனே ஏற்றுக் கொண்டுள்ளது.

மருந்துச் செலவு மட்டும் மாதம் ரூபாய் ஆயிரம் ஆகிறதாம். தவிர உணவு வகைகள். காலையில் இடியாப்பம் அல்லது இட்லி. பிற்பகல் காய்கறிகளுடன் உணவு. இரவு சப்பாத்தி. பொழுதுபோக்கிற்காக கேபிள் டீவி.

"ரெண்டு வருஷமா சரியான தூக்கமே கிடையாது. படுத்தா, நின்னா, உட்கார்ந்தால் மூச்சு இரைக்கும். வியர்த்துக் கொட்டும். கொஞ்ச கஷ்டமா பட்டேன்? உசிர் போயிடாதான்னு இருக்கும். இப்பத்தான் தூங்கறேன். சந்தோஷமா இருக்கேன்... யாருக்கு நன்றி சொல்றது? டாக்டருக்கா... என்னை கவனிச்சுக்கற நர்ஸுங்களுக்கா... எல்லாத்துக்கும் மேல தான் செத்து, என்னைப் பிழைக்க வைச்ச அந்த... அந்த...."

மிகவும் உணர்ச்சிவசப்படுகிறார் மைமூன்.

பொழுது போகாத போது உச்சரித்துப் பாருங்கள். டைலேட்டட் கார்டியோ மயோபதி (Dilated Cardio Myopathy) என்பது மைமூனுக்கு வந்த வியாதியின் பெயர். இருதயச் சதை வழக்கத்துக்கு மாறாகத் தடித்து இருந்ததால் இருதயமே கொஞ்சம் கொஞ்சமாக விரிந்து விட்டிருக்கிறது. தொடர்வதாக ரத்த ஓட்ட பாதிப்பு. இருதயத் துடிப்பில் கோளாறு. சுவாசத் தடங்கல்.



• வேளை தவறாமல் செக்-அப்

உலக நாடுகளில் 1967லிருந்தே செய்யப்பட்டு வருவதுதான் இந்த இருதய மாற்று அறுவை சிகிச்சை என்றாலும் நம்மூருக்கு ரொம்பப் புதுசு.

ஒரே ரத்த குரூப்பைச் சேர்ந்தவரின் இருதயத்தை (அவர் இறந்து விட்டால்) அடுத்தவருக்கு மாற்றி வைக்கலாம். 70 முதல் 80 சதம் வரை இருதயம் பெற்றவர் உயிர்பிழைக்க வாய்ப்பு உண்டு. 25 முதல் 30 சதம் வரை ரிஜக்ட் ஆகவும் சாத்தியம்.

"ஒரு நாளைக்கு 6 - 7 இருதய ஆபரேஷன்கள் செய்கிறேன். ஆனால் இந்த கேஸ் ஒரு சாதனைதான். ஆபரேஷன் வெற்றியடைந்ததும், மைமூன் பிழைத்து, நலமாகி வருவதும் கடவுள் அருளால்தான்" என்று டாக்டர் கே.எம். செரியன் சொன்னார்.

படிப்பறிவில்லாத மைமூன் பீவிக்கு இந்தச் சாதனை புரியவில்லை. தான் பிழைக்க உதவிய மருத்துவத் தொழில் நுட்பத்தின் இமாலய வளர்ச்சி பற்றிய பிரக்ஞை ஏதுமில்லை. அவர் மிகவும் உணர்ச்சிவசப்பட்டிருக்கிறார்.

"சின்னப் பொண்ணு.... முப்பது வயசுதான்னு சொன்னாங்க... அய்யரு பொண்ணுன்னாங்க... எனக்கு உசிரு குடுத்துட்டுப் போயிடுச்சி... முகம் கூடத் தெரியாது... அவங்க உறவுக்காரங்க யாரையும் கூட நான் பார்க்கலை... அட்ரஸு கூடத் தெரியாது... எவ்ளோ பெரிய மனசு..."

தழுதழுக்கிறார்.

மைமூன் பீவி இன்னும் சில நாட்களில் டிஸ்சார்ஜ் ஆகிவிடுவார். முதல் வேலையாகத் தமக்கு இருதயம் கொடுத்த ஹேமாவின் உறவினர்களைப் பார்த்து நன்றி சொல்லத் துடிக்கிறார். ஆனால் அவர்களோ, 'இது மனிதர்க்கு மனிதர் செய்யும் உதவி; பப்ளிசிட்டி எதுக்கு....?' என்று கருதி, முகவரியைக் கூட யாருக்கும் தர வேண்டாம் என்று டாக்டர்களிடம் சொல்லி விட்டார்களாம்!

- ஔரங்கசீப்

படங்கள் : ராஜநாராயண்



# நடராஜ் ஃபைனான்ஸ்

**பென்ஷனர் திட்டம்**

பென்ஷனர் திட்டத்தில் அதிக பட்ச தொகையை முதலீடு செய்வதன் மூலம் மாத வருவாயை இரண்டு மடங்காக ஆக்கிக் கொள்ளலாம். 'டெபாஸிட்' தொகையைப் பொறுத்து பண்ணை நிலங்களை செக்யூரிட்டியாக அளிக்கிறோம்.

## 24% P.A.

**1 கிரவுண்ட் இலவச திட்டம்**

இரட்டிப்புத் திட்டத்தில் 3 ஆண்டுகளுக்கு ரூ.50,000 'டெபாஸிட்' செய்வோருக்கு, ஒரு கிரவுண்ட் பண்ணை நிலம் இலவசம்.

**தேக்குத் திட்டம்**

ஒரு யூனிட்டுக்கு ரூ.1000 செலுத்தி, தேக்கு மரவளர்ப்புத் திட்டத்தில் சேர்கிறவர்களுக்கு 15 ஆண்டுகளுக்குப் பிறகு குறைந்த பட்சம் ரூ. 50,000 கிடைக்கும்.

☆மற்றும் மாதாந்திர வட்டித்திட்டம் ☆3-ஆண்டுகளுக்கு ரூ.12,000 'டெபாஸிட்' செய்து இரண்டே ஆண்டுகளில் 3 சவரன் தங்கம் பெறும் திட்டம் ☆3 ஆண்டு இரட்டிப்புத் திட்டம்☆

வட்டிக்கும், அசலுக்கும் முன் தேதியிட்ட காசோலைகள் வழங்கப்படுகின்றன.

**Call : 4342098, 4840150**



## NATARAJ FINANCE & INVESTMENTS

"Shanthi Complex" 3rd Floor, 26-Ranganathan Street, T.Nagar, Madras - 600 017.
Branches : 1-B, Kamarajar Road, (Upstair), KANCHEEPURAM - 631 501,
2-B, Selvam Nagar, THANJAVUR - 613 007.



# நடராஜ் சிட்ஸ்

(தமிழ்நாடு) பிரைவேட் லிமிடெட்

'சிட்பண்ட்'
சட்டப்படி பதிவு செய்யப்பட்ட ரூ.5,000, 10,000, 15,000, 25,000 - சீட்டு குருப்புகள் நடைமுறையில் உள்ளன. புதிய குருப்புகள் ஆரம்பமாக இருக்கின்றன.

'எளிய விதிமுறைகள்'
'ஷ்யூரிட்டி' கொடுத்த உடனேயே சீட்டுத்தொகையை பட்டுவாடா செய்கிறோம். 'ஷ்யூரிட்டிக்காக' உங்கள் கழுத்தை நெரிப்பதில்லை. கடுமையான நிபந்தனைகள் விதிப்பதில்லை.

**சீட்டு குருப்பில் சேர்கிறவர்களுக்கும், அறிமுகப்படுத்துகிறவர்களுக்கும் கவர்ச்சி மிகு பரிசுகள் காத்திருக்கின்றன.**



**Call : 4342098, 4840150**

## நடராஜ் சிட்ஸ் (தமிழ் நாடு) பிரைவேட் லிமிடெட்,

"சாந்தி காம்ப்ளெக்ஸ்", 3வது மாடி, 26, ரெங்கநாதன் தெரு, தி.நகர், சென்னை - 600 017.
கிளைகள் : 1-B, காமராஜர் சாலை (மாடி), காஞ்சிபுரம் - 631 501, 2-B, செல்வம் நகர், தஞ்சாவூர் - 613 007.
விரைவில்; திருவாரூர், பெங்களூர் கிளைகள் ஆரம்பம்.    எஸ். நடராஜன் (மேனேஜிங் டைரக்டர்)

'சிட்பண்ட்' சட்டப்படி கிளைகள் துவக்கி நடத்த முக்கிய நகரங்களில் - கிளை மேலாளர்கள், டெவலெப்மெண்ட் மேனேஜர்கள், கேன்வாஸர்கள் தேவை. வாழ்க்கையில் முன்னேற துடிக்கும் ஆர்வமுள்ள இளைஞர்கள் உடன் தொடர்பு கொள்ளவும்.

Temple Ads

CHIT & FINANCE | OIL MILLS | EXPORTS | FARM HOUSE | PUBLICATIONS












**நமது போட்டோவை கம்ப்யூட்டரில் கொடுத்துவிட்டால், நமது முக அமைப்புக்கான ஹேர் ஸ்டைலை கம்ப்யூட்டரே தேர்ந்தெடுத்துக் கொடுத்து விடுகிறது இப்போது...**






"இங்கே வருகிறவர்கள் பல்வேறு ஸ்டைல்களடங்கிய கேடலாக்கை நூறு தரம் புரட்டிப் புரட்டிப் பார்ப்பார்கள்; கண்ணாடியில் அப்படியும் இப்படியும் திரும்பித் திரும்பிப் பார்ப்பார்கள். கடைசியில், 'ரஜினி, ஸ்டைலா கோதிக்குவாரே... அது மாதிரி வரும்படியா வெட்டி விடுங்க சார்...' என்று கேட்பார்கள்.

"இப்படிக் கேட்பவர்களுடைய தலைமுடி, தலையோடு சுருண்டு ஒட்டியிருக்கும். எப்படி ரஜினி ஸ்டைல் இவர்களுக்கு வரும்? வராது என்றாலும் கஸ்டமரிடம் இப்படி நேரடியாகச் சொல்லி விட முடியாது. 'சுருள் முடியை நேராக்கும் straightening செய்து கொள்கிறீர்களா?' என்று மென்மையாக அவர்களுக்குப் புரிய வைத்து, முடிந்த வரை அவர்களுடைய தேவைகளைப் பூர்த்தி செய்வேன்!" என்கிறார், மை ஃபேர் லேடி பியூட்டி பார்லரின் ஆண்கள் கிளையில் பணிபுரியும் என். ரமேஷ்.

இதற்கென்று தனியான பயிற்சி ஏதும் எடுத்துக் கொண்டிருக்கிறாரா இவர்?

"இல்லை. இங்கே வந்து சேர்ந்ததும் ஓனர் சசி அம்மாதான் கத்துக் கொடுத்தாங்க. இப்ப நான் மஷ்ரூம் கட், ஸ்டெப் கட் எல்லாம் பழகிட்டேன். மெஷின் யூஸ் பண்ணாமல், கைகளாலேயே தலைமுடியைக் கொத்துக் கொத்தாக எடுத்து கட் பண்ணும் finger cuttingும் தெரியும். இதுதான் நடிகர்கள் செய்து கொள்வது. பத்து நாள் கழித்து முடி வளர்ந்த நிலையிலும் ஸ்டைல் மாறாது.

"இப்போது கபில் தேவையும் காம்ப்ளியையும் பார்த்து, சைடில் வெட்டிக் கொண்டு பின்புறம் நீளமாக வளர்த்து ரப்பர் பாண்ட் போட்டுக் கொள்கிறவர்களும் இருக்கிறார்கள். பிரபுதேவாவின் தம்பி – 'பம்பாய்' அரபிக் கடலோரம் புகழ் நாகேந்திர பிரசாத்துக்குக் கூட நான்தான் முடிதிருத்தி விடுகிறேன். பின்னால் நீளமாக வளர்த்திருப்பார். அது கழுத்தில் உறுத்தாத வகையில் 'ட்ரிம்' செய்து விடுவேன்.





# தலைகள் பலவிதம்

"இப்போது இன்னொரு ஃபாஷனும் வந்திருக்கிறது. அதுதான் தலைமுடிக்குக் கறுப்பு, மருதாணி வர்ணங்கள் பூசிக் கொள்வது தவிர, இம்போர்டட் 'சில்வர்' கலரைக் கூட சில 'மாடல்'கள் விரும்பிப் பயன்படுத்துகிறார்கள் என்பது..." என்று விளக்கிக் கொண்டே போகிறார் ரமேஷ்.

அழகாக வெட்டி, ஷாம்பூ போட்டு, ஹேர் ட்ரையர் வைத்து 'செட்' பண்ணி விடுவதற்கு அறுபது ரூபாய் சார்ஜ். "இந்த ஹேர் ட்ரையரை அடிக்கடி உபயோகிக்கக் கூடாது. உபயோகித்தால் முடியின் வலிமை குறைந்து விடும். மாதமொரு முறை ஓகே!" என்று எச்சரிக்கையும் செய்கிறார் ரமேஷ்.

**"பெண்களுக்கிருக்கும் அத்தனை முடியலங்காரங்களும் சிகிச்சைகளும் ஆண்களுக்கும் உண்டு!"**





என்று சொல்பவர் திலீப் பிஸ்வாஸ். சென்னையில் ஆறு கிளைகளுடன் இயங்கிவரும் 'என்னிஸ் பியூட்டி பார்லர்'களின் பொது மேலாளர் இவர்.

"இப்போது கம்ப்யூட்டரில் ஒருவருடைய போட்டோவைக் கொடுத்து விட்டால், அவரது முக அமைப்புக்கேற்ற ஹேர் ஸ்டைலைத் தேர்ந்தெடுத்துத் தந்து விடுமாமே?" என்று 'என்னிஸ்' நிர்வாகிகளில் ஒருவரான ரொசாரியோவிடம் கேட்டபோது, "ஆமாம்; பம்பாயில் இது அறிமுகமாகி விட்டது. ஆனாலும் முக அமைப்பு, முடியின் தன்மை போன்றவற்றையெல்லாம் நேரில் பார்த்து ஹேர் ஸ்டைலைத் தேர்ந்தெடுக்கிற மாதிரி கம்ப்யூட்டர் தேர்வு இருக்காது!" என்கிறார்.

"இது மாதிரியான பிரச்னைகளெல்லாம் நமக்கும் கிடையாதுங்க... அவங்கவங்க எப்படியெப்படி வாரி விட்டுக் கொண்டிருக்கிறார்களோ அதன்படியே நான் வெட்டி விட்டு விடுவேன்!" என்று கூறும் டி.கே. இராமச்சந்திரனின் தொழில் அனுபவம் அரை நூற்றாண்டுக்கும் மேலே!

# ஸ்டைல்களும் பலவிதம்!

சொன்னார்கள். சுற்றிலும் துப்பாக்கி ஏந்திய செக்யூரிட்டிகளுக்கு மத்தியில் அவருக்கு முடி திருத்தினேன்!'' என்று பழைய அனுபவத்தை விவரிக்கும் இராமச்சந்திரன் இப்போது பணி புரியும் இடம் சென்னை கிரிக்கெட் கிளப்.

''கிரிக்கெட் நடக்கும்போதெல்லாம் வீரர்களுக்கு நான் தான் மசாஜ் செய்து விடுவேன்; முடி திருத்துவேன். காவஸ்கருக்கு மெல்லிய தலைமுடி. தலையோடு ஒட்டிய கிராப். கபிலுக்குக் கனத்த, கருண்ட முடி...'' என்று சொல்லும் இராமச்சந்திரன் அனைவருக்கும் வலியுறுத்தும் ஓர் அறிவுரை : முடிவெட்டும் உபகரணங்களை முடிந்தால் அவரவரும் சொந்தமாக வாங்கி வைத்துக் கொள்ளுங்கள். இல்லாவிட்டால், சலூனில் உங்களுக்கு உபயோகிக்க ஆரம்பிப்பதற்கு முன்பு, அவற்றை டெட்டாலில் போட்டுச் சுத்தம் செய்கிறார்களா என்று கவனியுங்கள். சிறிய சலூன்களில் இப்படிச் செய்ய மாட்டார்கள் என்றால் நீங்களே ஒரு டெட்டால் பாட்டிலைக் கொண்டு சென்று சுத்தம் செய்யச் சொல்லுங்கள். ஸ்டைலோடு ஆரோக்கியமும் ரொம்ப ரொம்ப முக்கியம்!



ரமேஷ் : ''முடிந்தவரை பூர்த்திசெய்வேன்'' (படம் : ராஜநாராயண்)

''எங்க அப்பா அந்தக் காலத்துல வெள்ளைக்கார துரைகளுக்கு மட்டுந்தான் வெட்டி விடுவார். அவருக்கு இருந்த ஒரு மதிப்பைப் பார்த்துத்தான் நான் இந்தத் தொழிலையே தேர்ந்தெடுத்தேன். முதலில் ஓட்டல் ஓஷியானிக்கில் வேலை பார்த்த போது ராஜ்கபூர், சுனில்தத், ராஜேஷ்கன்னா ஆகியோரெல்லாம் என்னிடம் தலையைக் கொடுத்திருக்கிறார்கள்!'' என்று சொல்லும் இராமச்சந்திரனுக்கு மறக்க முடியாத ஓர் அனுபவமும் உண்டு!

''1957-ல் ரஷ்ய அதிபர் குருஷ்சேவும் புல்கானினும் சென்னைக்கு வந்திருந்த போது என்னை கவர்னர் மாளிகைக்கு அழைத்துச் சென்று, புல்கானினுக்கு முடி வெட்டி விடச் சொன்னார்கள். ஆரம்பிக்கும் முன்பு முழங்கை வரை ஸ்பிரிட் போட்டுக் கழுவிக் கொள்ளச் சொன்னார்கள்.

**- நிர்மலா சக்கரவர்த்தி**

---

**''வெய்யில் நேரத்துலே மீட்டிங் வேணாம்னா கேட்க மாட்டிங்களே.... அங்கே பாருங்க... அவங்க வீசற முட்டையெல்லாம் இங்கே ஆம்லெட்டா வந்து விழுது...!''**

**-லெ.நா. சிவகுமார்**





''இந்தப் பத்திரிகைக்காரங்கதான் என் கதைகளைச் சரியா எடை போடாமல் திருப்பி அனுப்பிடறாங்க. நீயாவது சரியா எடை போட்டு ஏமாத்தாம பணம் குடுப்பா!''

-ஞா. ஞானமுத்து

# உங்களுடைய செல்ல மகளுக்கு.




5 வயது வரையிலான பெண் குழந்தைக்கான ஒரு தனிச்சிறப்பான ப்ளான்

## சிறப்பம்சங்கள் :

- குறைந்தபட்ச முதலீடு ரூ.1500 மற்றும் அதற்குமேல் ரூ. 500-ன் மடங்கில். உச்ச வரம்பு கிடையாது.
- தனிநபர், மாநில, மத்திய அரசு, ட்ரஸ்ட், சங்கம், கார்ப்போரேட் பாடி — 5 வயது வரையுள்ள பெண் குழந்தைக்காக முதலீடு செய்யலாம்.
- குழந்தை பிறந்ததும் செய்யும் ரூ.1500 முதலீடு 20 ஆண்டுகளில் ரூ.21,000 ஆகலாம். வளர்ச்சி நிலை ப்ளானில் சேர்ந்திடும் வயதைப் பொறுத்திருக்கும்.
- விண்ணப்பம் ஏற்றுக்கொள்ளப்பட்ட தேதியிலிருந்து முதிர்வுறும் தேதி கணக்கிடப்படும்.
- போனஸ் டிவிடெண்ட் ஒவ்வொரு கால வரையிலும் அறிவிக்கப்படலாம் மற்றும், போனஸ் டிவிடெண்ட் முதிர்வடைந்ததும் வழங்கப்படும்.



**யூனிட் ட்ரஸ்ட் ஆஃப் இந்தியா**
உங்கள் வளமான எதிர்காலத்திற்கு

மியூச்சுவல் ஃபண்டுகளிலும், செக்யூரிட்டிகளிலும் செய்யப்படும் அனைத்து முதலீடுகளும் மார்க்கெட் ரிஸ்கிற்கு உட்பட்டவை. செக்யூரிட்டி மார்க்கெட்டை பாதிக்கும் காரணங்களைப் பொறுத்து என்ஏவி திட்டங்கள் ஏற்றத் தாழ்வுகளுக்கு உட்படலாம். கடந்தகால சாதனை வருங்கால விளைவைக் குறிப்பதாகாது. ராஜ் லக்ஷ்மி என்பது திட்டத்தின் பெயரே தவிர, ப்ளானின் தரத்தை, அதன் எதிர்கால வாய்ப்பு அல்லது ஆதாயத்தை எவ்வகையிலும் குறிப்பிடுவதல்ல. ஃபண்டின் நோக்கங்கள் நிறைவேற்றப்படும் என்று யாதொரு உறுதியும் அளிக்கப்பட மாட்டாது. முதலீடு செய்யும்முன் வழங்கு பத்திரத்தை தயவு செய்து படிக்கவும்.

மண்டல அலுவலகம்: 29, இராஜாஜி சாலை, சென்னை 600 001. போன்: 517101.
கிளை அலுவலகங்கள்: • சென்னை. போன்: 517101, 517190
• மதுரை. போன்: 38186 • திருச்சி. போன்: 27060 • கோயம்புத்தூர். போன்: 214973.

0135 B/95 M TM

காசி பில்டர்ஸ் வழங்கும்

# காசி குரூப் ஹவுசிங் பெனிபிட் ஸ்கீம்

**முதல் மாதத் தவணையில் சிறப்புத் தள்ளுபடி 10.12.95 வரை**

காசி குரூப் ஹவுசிங் பெனிபிட் ஸ்கீமின் வெற்றிகரமான 17-வது குலுக்கல் கடந்த 29.10.95 அன்று நடைபெற்றது. குலுக்கலில் வீடுபெற்ற அதிர்ஷ்டசாலிகளை "காசி பில்டர்ஸ்" நிறுவனம் வாழ்த்துகிறது.

இத்திட்டத்தில் ரூ.1,500/- முதல் ரூ.5,000/- வரை மாதத் தவணைகளாகச் செலுத்தி குலுக்கல் மூலம் 300 முதல் 1000 சதுரடிகள் வரையிலுள்ள வீட்டினை தேர்ந்தெடுத்து சொந்த வீடாக்கிக் கொள்ளலாம். மீதித் தொகையை வாடகை போல் வீட்டிலிருந்து கொண்டே செலுத்தலாம்.

இத்திட்டத்தில் வீடு பதிவு செய்பவர்களுக்கு முதல் மாதத் தவணைத் தொகையில் 50% தள்ளுபடி வழங்கப்படும். **சென்னையில் வீடு கிடைக்கும் இடங்கள்;-** சென்னை கே.கே. நகர் மேற்கு, விருகம்பாக்கம், வளசரவாக்கம், சாலிகிராமம், வடபழனி, போரூர் ஆகிய இடங்களில் வீடுகள் கட்டித் தருகிறோம்.

## சுலபத் தவணை சுபமங்களா திட்டம்

இத்திட்டத்தில் ரூ.10,000/- மட்டுமே முன்பணமாகச் செலுத்தி சொந்த வீடு பெறலாம். மீதமுள்ள தொகைக்கு நாங்களே எல்ஐசி, கேன்ஃபின் மூலமாக கடனுதவி ஏற்பாடு செய்கிறோம். **மதுரையில் வீடு கிடைக்கும் இடங்கள் ;-** எல்லீஸ் நகர், அண்ணாநகர், S.S. காலனி, T.V.S. நகர், அழகப்பா நகர், வேல்முருகன் நகர் மற்றும் மதுரையின் பிரதான இடங்களில், **திருச்சியில் வீடு கிடைக்கும் இடங்கள் ;-** ஸ்ரீரங்கம், திருவெறும்பூர், கே.கே. நகர், கிராஃபோர்டு மற்றும் திருச்சியின் பிரதான இடங்களில். **குண்டூரில் வீடு கிடைக்கும் இடங்கள் ;-** விகாஸ் நகர், வித்யா நகர், சியாமளா நகர், சந்திர மவுலி நகர், பட்டாபிபுரம் மற்றும் குண்டூரின் பிரதான இடங்களில். **கோவையில் வீடு கிடைக்கும் இடங்கள் ;-** பேரூர், மருதமலை, பீளமேடு, வடவள்ளி, துடியலூர், ராமநாதபுரம் மற்றும் பல இடங்களில்.

**காசி பாண்டு** : உங்கள் முதலீடு 3 வருடங்களில் இரட்டிப்பாகிறது

**கோல்டன் பாண்டு** : உங்கள் முதலீடு 5 வருடங்களில் மும்மடங்காகிறது.

## 5% ஊக்கத்தொகை

## காசி பைனான்ஸ் & கிரெடிட் கார்பொரேஷன்

**18% முதல் 27% வரை வட்டி + 2% முதல் 5% வரை ஊக்கத் தொகை**

**சிறப்பு ஊக்கத்தொகை 10.12.95 வரை**

இத்திட்டத்தில் குறைந்த பட்ச வைப்புத் தொகை ரூ.5,000/-மும் அதற்கு மேல் ரூ.1000/- மடங்குகளில்

புரோக்கர்களுக்கும், வைப்பு நிதி ஏஜெண்டுகளுக்கும் 2% அதிக ஊக்கத்தொகை வழங்கப்படும்.

*மேலும் விபரங்களுக்கு:-*

ஞாயிறு அன்றும் அலுவலகம் உண்டு




**காசி பில்டர்ஸ்,**

**காசி ஹவுசிங் & டெவலப்மெண்ட் லிட், மற்றும்**

**காசி பைனான்ஸ் & இன்வெஸ்ட்மெண்ட்**

காசி தியேட்டர் காம்பளக்ஸ் நெ.91,92 ஜவஹர்லால் நேரு சாலை, அசோக்நகர், சென்னை-83. Ph :4822206,4821969,4825506. Fax : 044-4825606

**கிளை அலுவலகங்கள் : சென்னை**, 13, கிழக்கு ஜோன்ஸ் ரோடு, சைதாப்பேட்டை, சென்னை-15. ✆ 456464 **திருச்சி** ; 5/B, 25, ஜெனனி பிளாசா, 5, பாரதியார் சாலை, கன்டோன்ட்மெண்ட், திருச்சி-621 001. **மதுரை** ; 246A நாயக்கர் புதுத் தெரு, முதல் மாடியில் மதுரை-625 001. சக்தி சிவம் தியேட்டர் எதிரில் **பெங்களூர்** ; 33, 2வது மாடி, கார்ப்பரேஷன் நம்பர் 400, ஓலிகா காம்பளக்ஸ், சம்பைக் ரோடு, வேது குறுக்குத் தெரு அருகில் மல்லீஸ்வரம், பெங்களூர்- 560 003. ✆ 363351 1532, 39வது E கிராஸ் 4வது "T" பிளாக், ஜெய நகர், பெங்களூர் 560 041. **குண்டூர்** No.11-1-15, ஸ்டேஷன் ரோடு, நரசராவ்பேட் பர்னிச்சர் மார்ட் மாடியில் நாஸ் சென்டர், குண்டூர் - 522001. போன் : 221424, 220014. **கோவை** ; ஓப்லி டவர்ஸ், 594/4, டிபி. ரோடு, ஆர்எஸ். புரம், கோயம்புத்தூர்-641 002. ✆ : 444656 *

# நெல்லைச் சீமை பயோடேட்டா!

## அண்ணாவால் நிறைவேறிய ஆசை!

என்னுடைய திருமணம் 1985-ம் வருடம் நடந்தது. ஊரில் அப்போதுதான் ஒரு கட்டுப்பாடு கொண்டு வந்தார்கள்; தெருக்களில் யாரும் ஒலிபெருக்கி வைக்கக் கூடாது என்று. அந்தக் கட்டுப்பாடு இன்றும் உள்ளது. சினிமா ரசிகனான எனக்கு 'நம் கல்யாணத்தில் ஒலிபெருக்கி வைத்து சினிமா பாடல்கள் கேட்க முடியாமல் போய் விட்டதே' என்ற வருத்தம் ஏற்பட்டது. பிறகு ஏதோ ஒரு பொருள் வாங்க வேண்டுமென்று கடைக்குச் சென்று விட்டேன். அரை மணி நேரம் சென்று வீட்டிற்கு வந்தேன். வாசலில் ஒலிபெருக்கி வைத்து, சினிமா பாடல்கள் கேட்டுக் கொண்டிருந்தன. வீட்டிலுள்ளவர்களை விசாரித்தபோதுதான் தெரிந்தது, எங்கள் வீடு ரோட்டின் பக்கம் முதல் வீடாக இருந்ததனால் பக்கத்து மைதானத்தில் பொதுக் கூட்டம் ஏற்பாடு செய்தவர்கள் இசைத்தட்டுகளை எங்கள் வீட்டுத் திண்ணையில் வைத்துப் போட்டிருக்கிறார்கள் என்று. நான் மனதார அறிஞர் அண்ணா அவர்களுக்கு நன்றி சொல்லிக் கொண்டேன். ஆம், அண்ணா அவர்களின் பிறந்த தினக் கூட்டம்தான் அது.

செய்யது மைதீன், திருநெல்வேலி - 5.

## பயனுள்ள கண்காட்சி!

நெல்லை மனோன்மணியம் சுந்தரனார் பல்கலைக் கழகத்தின் சார்பாக நெல்லையில் சமீபத்தில் 'மனோ புக் ஃபேர் 95' என்ற புத்தக கண்காட்சி நடைபெற்றது. வேறு எந்தப் பல்கலைக் கழகமும் செய்யாத ஒன்றாக இது போன்ற புத்தக கண்காட்சியை மனோன்மணியம் சுந்தரனார் பல்கலைக்கழகம் சென்ற ஆண்டும் நெல்லையில் நடத்தியது. இந்தியாவின் தலை சிறந்த தரப்பட்ட புத்தக நிறுவனங்கள் கலந்து கொண்டு தங்கள் புத்தகங்களை இக் கண்காட்சியில் விற்பனை செய்தனர், 10சதம் தள்ளுபடி விலையில். இந்த கண்காட்சி மாணவர்க்கும், புத்தகப் பிரியர்க்கும் மிகவும் பயனுள்ளதாக அமைந்தது.

இ. முத்துராஜ், நெல்லை -8.

## மீண்டும் 'ஒட்டகம்'!

நெல்லை பேருந்து நிலையத்தைச் சுற்றி உள்ள ஆக்கிரமிப்புகளை பலத்த எதிர்ப்புகளிடையே குர்னிகால் சிங் அகற்றிய போது புதிய இன்னொரு பஸ் நிலையமே கிடைத்தது. ஆனால் 'ஒட்டகம்' மீண்டும் மூக்கை நுழைய விட்டிருக்கிறது!

அ. நந்தகுமார், ஏரல்.

## கத்துக்கிடதேயளா?

எங்க ஊர் பாஷையை கொஞ்சம் கத்துக்கிடதேயளா?

சீனி – சர்க்கரை; சீனி அவரைக்காய் – கொத்தவரங்காய்; தடியங்காய் – பூசனிக்காய்; தேங்காச்சில்லு – தேங்காய்ப்பத்தை; ஆச்சி – பெண்மணி; பிளசர் – கார்; கார் – பஸ்; ஜோலி – வேலை; குறுக்கு – முதுகு; வலிக்கு – வலிக்கிறது; சங்கு – கழுத்து; ஏசுதான் – திட்டுறொன்; கங்கு – நெருப்பு; சடங்காயிட்டா – பெரியவளாகிவிட்டாள்; இம்புட்டு தண்டி – இவ்வளவு பெரிசு; பைத்தாரன் – பைத்தியக்காரன்; செல்லட்டு – போகட்டும்; வீச்சடிக்கு – நாற்றமடிக்கிறது.

விஸ்வம்மாமா,
திருநெல்வேலி டவுன்.

## நெல்லைச்சீமை பயோடேட்டா!

அன்று : நெல்விளையும் பூமி

இன்று : கலகம் விளையும் பூமி

உயிர் : விவசாயம்
நம்புவது : தாமிரவருணியை; மழையை!
நம்பாதது : பொதுப்பணித் துறையை!
எதிரி : மாநகராட்சி மற்றும் அரசு டிபார்ட்மெண்ட்கள்!
உபதொழில் : சாராயம் வடித்தல்-விற்றல்..
பொழுதுபோக்கு : சினிமா + கேபிள்டீ.வி.
வளர்வது : கலகமும், கொள்ளையும், பஸ் எரிப்பும்.
வளராதது : தொழில்துறை..(உள்ளமுற்ற தொழில்துறை)
சமீபத்திய எரிச்சல் : பஸ் போக்குவரத்து பாதிப்பு
நீண்டகால எரிச்சல் : உறங்கும் நிர்வாகம்!
வினோதம் : K.T.C. பஸ்கள்...!
ஆறுதலுக்கு : குற்றாலம்!

கே.ஜி.எஸ். கோவிந்தன், கிருஷ்ணாபுரம்.

## ஏலே! ஏ பைதலே!

நெல்லை மாவட்டத்தில் சாதாரணமாக ''ஏலே வா! ஏலே போ!'' என்று அன்பாகச் சொல்வது வட்டார வழக்கு. இந்த ''ஏலே'' என்ற சொல் தூய தமிழ்ச் சொல்லான ''ஏ பைதலே'' என்ற சொல்லின் மருவு ஆகும். ''ஏ பைதலே'' என்பதற்கு ''ஏ குழந்தாய்'' என்று அர்த்தம்.

சி. அழகப்பன், வி.கே. புரம்.

## சினிமாவில் ரசனை!

வேற்றுமொழிப் படங்களைப் பொறுத்த வரையில் திருநெல்வேலி மக்களின் ரசனை அலாதியானது. 'சூப்பர் ஹிட்' படமான 'ஹம் ஆப்கே ஹைன் கவுன்' இங்கு ஓடியதோ மூன்று வாரங்கள் மட்டுமே. 'கிளிஃப் ஹேங்கர்' படமோ ஒரே வாரத்தில் போய் விட்டது. ''ஸ்பீடு'' எண்ணி பதினைந்து நாட்கள் மட்டுமே. ஸ்பீல்பெர்க், ஜாக்கிஜான் போன்றோரின் படங்கள் மூன்று அல்லது நான்கு நாட்களில் காணாமல் போய்விடும். வேற்றுமொழிப் படங்கள் என்பதால் அதற்கு மேல் ஓடாதது ஒன்றும் பெரிய விஷயம் இல்லை என்கிறீர்களா?... ஒரு நிமிஷம்! ஆனால் வேற்று மொழிப் படங்களான செக்ஸ் காட்சிகள் நிறைந்த ஆங்கிலப் படங்களும், தாலாம்தர மலையாளப் படங்களும் பிய்த்துக் கொண்டு ஓடுகின்றன... என்னே ரசனை!

வீ.முத்தையா, திருநெல்வேலி டவுண்.

## ஜோக்:

''டாக்டர்'' தொழில் எப்படி நடக்கு?
''பீஸ்'' புல்லா இருக்கு!''

பாளை பசும்பொன், திருநெல்வேலி – 11.



### சாட்டிலைட் டீ.வி. பிரச்னைகளைப் பெருக்குகிறது!

செய்திகள் கேட்பதற்குக் கூட நேரம் கிடைப்பதில்லை. 'சாட்டிலைட் டீ.வி' நிகழ்ச்சி நிரலுக்குப் பத்திரிகையில் முழு பக்கம் போதவில்லை. புற்றீசல் போல, நாளொரு சாட்டிலைட் டீ.வியும் பொழுதொரு சானலுமாக ரசித்துக் கொண்டிருக்கும் நம்மவர்களுக்கு ஓர் எச்சரிக்கை மணி-மலேசியாவிலிருந்து!

அங்கே 24 மணி நேர ஒளிபரப்புக்கு அனுமதி கேட்டது ஒரு தொலைக்காட்சி நிறுவனம். மலேசிய செய்தித் தொடர்பு அமைச்சரகம் மறுத்து விட்டது. இதற்கு அரசு சொல்லும் காரணம் கவனிக்கத் தக்கது! "24 மணி நேர ஒளிபரப்பு அமுலில் இருக்கும் நாடுகளின் அனுபவத்தை வைத்துப் பார்க்கும்போது, இதனால் குடும்பப் பிரச்னைகள் பெருகி வருவதுடன், தொழிலாளர் உற்பத்தித் திறனும் குறைந்து விட்டது தெரிய வருகிறது!"

ஆதாரம் : "ஹிந்து"

தகவல் : இரத்தின. மனோகரன்

# தக்ஷிணாவின்

## புதிய கிளைகள்

### திறப்பு விழா சலுகை

**டிசம்பர் 1 '95 முதல் ஜனவரி 14 '96 வரை**

★ பாரீஸ் மற்றும் மயிலாப்பூரில் கிளைகள் திறக்கப்பட்டுள்ளன ★ பிக்சட் டெபாசிட் ஸ்கீம்களுக்கு குறைந்தபட்ச முதலீட்டுத் தொகை ரூ. 5000/- ★ 7 வெவ்வேறு டெபாசிட் திட்டங்கள் ★ இச்சலுகை அனைத்து கிளைகளிலும் உண்டு ★ கவர்ச்சிமிகு ஊக்கப்பரிசுகள்

உடனே உங்கள் அருகாமையிலுள்ள தக்ஷிணா கிளைக்கு விரைந்து சென்று, உங்கள் பிக்சட் டெபாசிட்டுகளிருந்து மிக அதிக பயனை பெற்று மகிழுங்கள்.

**ஆண்டிற்கு 25% வட்டி + தங்க நாணயம்**

**இந்த விளம்பரத்தை கொண்டு வந்து, உங்கள் டெபாசிட்டுகளில் 1% விசேஷ ஊக்கத் தொகையை பெறுங்கள்!**



# தக்ஷிணா ஃபைனான்ஸ்

தலைமை – நிர்வாக அலுவலகம் :

5/1, கோபாலகிருஷ்ணா ரோடு, (ஹோலி ஏஞ்சல்ஸ் கான்வென்ட் அருகில்),
தி.நகர், சென்னை – 600 017. ✆ 8250598, 8278687

கிளை அலுவலகம் :

**அண்ணாநகர்** : 1958 டி., எல்.பி.டபிள்யூ டவர்ஸ், II அவின்யூ, (தபால் நிலையம் எதிரில்), அண்ணாநகர், சென்னை – 600 040. ✆ 6267716, 6268871 **மைலாப்பூர்** : முதல் மாடி, வேதாந்த தேசிகர் தெரு, (ஸ்ரீ சில்க்ஸ் எதிரில்) மைலாப்பூர், சென்னை – 600 004. **நங்கநல்லூர்** : "தக்ஷிணா என்கிளேவ்", 12, IV மெயின் ரோடு, நங்கநல்லூர், சென்னை – 600 061. ✆ 2349025 **பாரீஸ்** : 1881/1 முதல் மாடி, என்.எஸ்.சி.போஸ் ரோடு, (தொலைபேசி அலுவலகம் எதிரில்), பாரீஸ், சென்னை – 600 001. **புரசைவாக்கம்** : 216, நார்த் பாய்ன்ட், பேஸ்மென்ட், (ஸ்ரீ கிருஷ்ணா கட்பீஸ் கலக்ஷன் அருகில்), புரசைவாக்கம் நெடுஞ்சாலை, சென்னை – 600 007. **தாம்பரம்** : 35-ஏ, ராஜாஜி சாலை, (ஸ்டுடென்ட்ஸ் ஜெராக்ஸ் அருகில்), கிழக்கு தாம்பரம், சென்னை – 600 045.

**வளமான வாழ்வு தரும் திடமான நிதி நிறுவனம்**

18

# இருட்டு அரண்மனைகள்

கி. ராஜேந்திரன்

சர்வதேச போலீஸ் அமைப்பின் பாரிஸ் தலைமையகத்தில் இருந்த வசதிகளைப் பார்த்து பிரமித்துப் போனான், இன்பசாகரன். வரிசை வரிசையாக கம்ப்யூட்டர்கள், ஃபாக்ஸ் வசதிகள், செல்லுலார் ஃபோன், சாதா ஃபோன், கான்டீன், ஓய்வுக்கூடம், மாநாடுகளுக்கான கூடம், நூலகம், பூமி மட்டத்துக்குக் கீழே கார் பார்க் என்று விரிந்தன. பணி முடிந்ததும் சற்று நேரம் விளையாடிச் செல்ல பிலியார்ட்ஸ் அறை கூட இருந்தது.

கம்ப்யூட்டர்கள், லட்சக்கணக்கான கிரிமினல்கள் குறித்தும் சந்தேகத்துக்குரிய ஆசாமிகள் பற்றியும் ஜாதகங்கள் சேகரித்து வைத்திருந்தன. விரல் ரேகை அடையாளமா? முகச் சாயலா? பூர்வாசிரமப் பெயர்களா? திவ்யசரித்திரமா? எது வேண்டுமானாலும் தட்டினால், கொட்டின.

உலகைப் பகுதி பகுதியாகப் பிரித்து, ஒவ்வொரு பிரிவுக்கும் சிலர் பொறுப்பாக்கப்பட்டிருந்தனர். அவர்கள் தம் பகுதியில் உள்ள நாடுகளிலிருந்து அதிகாரபூர்வமாகக் கேட்கப்படும் தகவல்களுக்கு விடைகளைக் கம்ப்யூட்டர்களிடம் பெற்று அனுப்பிக் கொண்டிருந்தனர். புதிதாகப் பெறப்படும் தகவல்களைப் பதிவு செய்து கொண்டிருந்தனர்.

ஜேம்ஸ் பிளாக் உடன் வர, வேகமாக ஒரு நோக்கினான்.

"சூரியாகவாமி ஒரு கோவேறு கழுதையைத் தன்னுடன் அழைத்து வந்திருக்கிறான்."

"கழுதையா?"

"கேள்விப்பட்டதில்லையா?" என்று உதடுகளில் புன்னகை நெளிய விட்டார். "ஒரு நாட்டிலிருந்து இன்னொரு நாட்டுக்கு போதை மருந்து கடத்தி வருபவர்களை கோவேறு கழுதை என்கிறோம். கழுதை பொதி சுமக்கும். என்ன சுமக்கிறோம் என்று தெரியாமலே சுமக்கும். அப்படி இவர்களும் கூலிக்குத் தெரிந்து சுமப்பதும் உண்டு; சில சமயம் நாம் போதை மருந்து கடத்துகிறோம் என்பது தெரியாமலே கூட சுமப்பதும் உண்டு. இத்தகைய ஏமாளிகளை போதை மருந்து கடத்துகிறவர்கள் நன்றாகப் பயன்படுத்திக் கொள்கிறார்கள். தெரியாமலே சுமப்பதில் ஒரு அனுகூலம் இருக்கிறது. இவர்கள் வெகு இயல்பாக நடந்து கொள்வார்கள். கஸ்டம்ஸ் செக்கிங்கில் சுலபமாகத் தப்பி விடுவார்கள். கூலிக்குத் தெரிந்தே கடத்துகிறவர்கள், இயல்பாக நடந்து கொள்ளப் பிரயாசைப்பட வேண்டும். ஒத்திகை பார்த்துக் கொள்ள வேண்டும். கஸ்டம்ஸ் அதிகாரிகளைக் கடப்பதும் கஷ்டம்."

"சூரியாசாமியின் கழுதை எந்த வகை?"

"முதல் வகை. ஒரு பெண் கழுதை. இந்தியாவிலிருந்து சூரியாகவாமியுடன் அதே விமானத்தில் வந்தாள். ஆனால் நெருங்கி உட்காரவில்லை. வெனிஸ்ஸில் தனித்தனி ஓட்டல்களில்தான் தங்கினார்கள். என்றாலும் பென்ஜமின் இரண்டு பெட்டிகள் சுமந்து அவள் அறைக்குப் போய்த் திரும்பியதால் அவளைக் கழுதை என்றே சந்தேகிக்க வேண்டியிருக்கிறது."

"பெட்டிகளை மாற்றி எடுத்து வருவதன் மூலம் போதை மருந்துகள் விநியோகமாகின்றன என்கிறீர்களா?"

"கரெக்ட். அடுத்து அவள் ரோம் நகருக்கோ அல்லது பாரிஸுக்கோ, எங்கே போகிறாளோ அங்கே பென்ஜமின் பின்தொடரலாம்."

"எனக்கு என்ன திட்டம் வைத்திருக்கிறீர்கள்?"

"இப்போ சூர்யாகவாமி பாரிஸில்; அவன் ரவுண்ட் அடித்து விட்டு இன்பா திரும்பிய போது ஜான் கோர்பிக் அவனுக்காகத் தயாராக இருந்தார். "வெனிஸ்ஸிலிருந்து நான் எதிர்பார்த்துக் கொண்டிருந்த ஃபாக்ஸ் தகவல் கிடைத்து விட்டது. இனி நாம் தொடர்ந்து பேசலாம்" என்றார்.

மேஜை மீது டிரேயில் இருந்த கோப்பைகளை டீ கெட்டில் சாய்த்து தேநீரால் நிரப்பினார். தங்க நிறம். ஆவி பறந்தது. "பால்?"

"நான் கவனித்துக் கொள்கிறேன்" என்று சின்ன ஸாஷே பிரித்து கவிழ்த்தான். சர்க்கரைக் கட்டி சேர்த்து கலக்கியவாறு அவரை



வெனிஸ்ஸில். நிஜ பென்ஜமினுக்கோ உன்னை அடையாளம் தெரியாது. அவன் அடுத்து எங்கே போகிறானோ அங்கு பறந்து போ. யதேச்சையாக சந்திப்பது போல் சந்தித்துப் பேசு. நீங்கள் இருவருமே இந்தியர்கள்; தமிழ் நாட்டினர் என்பதால் இயல்பாக அமையும். அவன் தெரிந்து செய்கிறானா தெரியாமல் செய்கிறானா என்பதை உறுதிப்படுத்திக் கொள். பிறகு அதற்கேற்ப பயமுறுத்தியோ, ஆசை காட்டியோ, அல்லது அவன் தேசபக்தியையும் நேர்மை உணர்வையும் தூண்டியோ காரியத்தை சாதிக்கப் பார்."

"அவன் மூலம் நான் என்ன சாதிக்க வேண்டும்?"

"ஜான் ரோக்கோ பற்றி தெரிந்து கொள். சூரியாகஸ்வாமியிடம் அவன் தன் சாமர்த்தியத்தைக் காட்டி விவரம் அறிந்து நமக்குத் தகவல் தரட்டும்."

"அதற்கு அவன் பணம் கேட்டால்?"

'கொடுப்போம். ஆனால் பண்டத்தைப் பெற்றுக் கொண்ட பிறகுதான் அதற்கான விலையைத் தர முடியும்."

"பென்ஜமின் பார்த்துக் கொண்டு சும்மா இருப்பானா?"

"இரண்டு சுற்றுலா பயணிகளின் சந்திப்பில், நட்பில் சந்தேகிக்க என்ன இருக்கிறது? ஒருவேளை அவன் இதில் தில்லுமுல்லு ஏதோ நடப்பதாக நினைத்தால் சூர்யாகஸ்வாமிக்குத் தக



''கேடி கண்ணுசாமி மனசு யாருக்கு வரும்?''

''என்ன விஷயம்ங்க?''

''நாளைலேர்ந்து ரிடயராகும் நான் கஷ்டப் படப் போறேனேன்னு எனக்காக ஒரு 'பெனிபிட் கொள்ளை' நடத்தப் போறானாம்!''

– ஞா. ஞானமுத்து

---

வல் கொடுப்பான். அவர் திரும்பி வந்து உன்னை அடையாளம் கண்டுகொள்வதற்கு முன்னால் நீ மறைந்து விடு. அவளை நம் பக்கம் இழுத்து நமக்காக வேலை செய்வதாக ஒப்புதல் பெற்ற பிறகு நீ அவளுடன் சேர்ந்து காணப்படப் போவதில்லையே."

"அவள் உல்லாசப் பயணத்தினிடையே ஒரு சல்லாபத்தில் ஈடுபட்டதாகத்தான் பென்ஜமினும் சூர்யாகவாமியும் நினைத்துக் கொள்வார்கள்" என்றான் ஜேம்ஸ் பிளாக். "உற்சாகம் தரும் சுற்றுலாப் பயணம், தனியே அழகிய பெண், கம்பீர ஆண், யதேச்சையான சந்திப்பு, காந்த ஈர்ப்பு, நெருங்கி வரத் தடையற்ற சுதந்திரச் சூழல், கவலைகளை மறந்த சுவாரஸ்யப் பேச்சு, குளிர், அரவணைப்பு, இதம், அப்புறம் எட்ஸட்ரா!"

"உங்கள் நாட்டின் பண்பாடு அடிப்படையில் பேசுகிறீர்கள்."

"உண்மைதான். 'வென் இன் ரோம் லிவ் லைக் எ ரோமன்' என்று சொல்லேன் அவனிடம். இதெல்லாம் கற்றுத் தரவா வேண்டும்?"

ஜான் கோர்மிக் இடைபுகுந்தான். "சமுதாயக் கட்டுப்பாட்டில் அடிமைப்பட்டு இருந்தவர்கள் திடீரென்று தளைகள் தகரும் போது தடுமாறி விழுவது சுலப சாத்தியம்தான். அப்படி அவள் சரியும் போது தாங்கிக் கொள்ள நீ அருகிலிருப்பாய்."

"அப்படியானால் சரிவது அவள் மட்டுமல்ல நானும்தான்."

"இருக்கலாம், இங்கே இதையெல்லாம் சரிவு என்றே நாங்கள் நினைப்பதில்லை; அந்தக் காலம் மலையேறி விட்டது இப்போது இதெல்லாம் இயல்பு."

" 'ஃபிரீ லவ்' என்று அதற்குப் பெயர் சூட்டியும் இருக்கிறீர்கள், தெரியும். தமிழ்நாட்டுப் பெண்களிடம் அதெல்லாம் சுலபத்தில் எடுபடாது. அந்த அளவுக்குப் போகாமலே காரியத்தை முடிக்கப் பார்க்கிறேன். எனக்கு அவளை யார் அடையாளம் காட்டுவார்கள்?"

"இன்டர்போல் ஏஜெண்ட் அவளைப் பின்தொடர்கிறானே, அவன் ஜாடையாக அவளை உனக்குக் காட்டிக் கொடுப்பான். அதற்கு அதிகமாக அவனிடம் எதிர்பார்க்காதே. பென்ஜமின் உஷாராகி விடலாம்."

"போட்டோ எடுத்து அனுப்பச் சொல்லியிருக்கலாமே? உபயோகப்படுமே?"

"அதை மறப்போமா என்ன? ஃபோட்டோ ஃபாக்ஸ் செய்யச் சொல்லியிருந்தேன். அதை எதிர்பார்த்து நான் காத்திருந்த நேரத்தில்தான் நீ ஜேம்ஸுடன் இந்தக் கட்டடத்தைச் சுற்றிப் பார்த்து விட்டு வந்தாய்."

ஃபைல் பிரித்து நீட்டினார். மேலாக ஃபாக்ஸ் ஃபோட்டோ கூடுதலாகச் சேர்த்திருந்தது. "டெலிலென்ஸ் போட்டு நமது ஏஜெண்ட் மறைவிடத்திலிருந்து எடுத்தது."

படத்தில், நெற்றி பாதி மறைத்து அரைக் கழுத்துடன் முடிவடைந்த நூதன ஹேர் டூ, ரேபான், ஏரான மேக்-அப், சின்னஞ்சிறு பொட்டு, துப்பட்டா துறந்த ஸல்வார் கமீஸ் அணிந்து எடுப்பாகத் தோற்றமளித்த பெண், தூரத்தில் எதையோ ஆர்வமாகப் பார்ப்பது போல முகம் சற்றே திரும்பியிருந்தாள்.

வெறித்தான்.

"என்ன நாக்அவுட்டா?"

"மைக் டைஸன் பஞ்ச்! இவளை எங்கோ எப்போதோ பார்த்த மாதிரி இருக்கு."

"ஹுர்ரே! ஐம்பது பர்ஸெண்ட் வெற்றி ஏற்கெனவே கிடைத்து விட்டது!" என்றார் ஜான் கோர்மிக்.

'எல்லா சாலைகளும் ரோமாபுரிக்கே அழைத்துப் போகின்றன' என்பதாக ஒரு சொற்தொடர் வழக்கில் இருக்கிறதே, அதன் முழு அர்த்தத்தையும் புரிந்து கொள்ள இங்கு நேரில்தான் வர வேண்டும்' என்று நினைத்தாள் சாயா.

'ரோமாபுரியில் இருப்பதை விடவும் வானளாவும் நவீன கட்டடங்கள் இதர உலக மகாநகரங்களில் இருக்கலாம்; ஆனால் இங்கு உள்ளது போல் ஒவ்வொரு கட்டடத்துக்கும் ஒரு தொன்மைச் சரித்திரத்தைக் கேட்டு அதிசயிக்க முடியாது. நகருக்கு அழகு ஊட்ட அலங்காரமான பொங்குபுனல்கள் இருக்கலாம்; ஆனால் ரோமாபுரிப் புனல்களில் இணைந்துள்ள சிற்ப அழகுகளை வேறெங்கும் பார்க்க முடியாது. மாபெரும் தேவாலயங்களைப் பலரும் அமைக்கலாம்; ஆனால் அவற்றில் இங்கு இருப்பன போன்ற உன்னதமான சுவரோவியங்களைக் காண முடியாது...

'இப்படி சொல்லிக் கொண்டே போக

லாம்... ஏன், பிற தேசங்களில் எத்தனையோ சாமர்த்தியசாலிகளான குற்றவாளிகள் இருக்கலாம்; ஆனால் அவர்கள் எல்லோருமே இதாலிய மாஃபியா கும்பலிடம் பிச்சை வாங்கத்தான் வேண்டும். இவர்களைப் போன்று உலக நாடுகள் பலவற்றிலும் கிளை விட்டுப் படர்ந்த கொடூரக் கொள்ளையர் அமைப்பு வேறு கிடையாது. இப்படியும் ஒரு பெருமை இதாலிக்கு!' என்று நினைக்கும்போதே சிரிப்பு வந்தது சாயாவுக்கு. அந்தச் சிரிப்பை விரட்டி அடித்தது, 'அந்த மாஃபியா கும்பலின் பிடியில் நானும் சிக்கியிருக்கிறேனோ?' என்ற எண்ணம்.

ரோம் நகரத்தை சுற்றுலா பஸ்ஸில் அமர்ந்து சுற்றிப் பார்த்துக் கொண்டிருந்த போது அவளுக்குப் பரவசமும் பயமும் மாறி மாறி ஏற்பட்டன.

**லி**யனார்டோ டா வின்ஸி என்ற மாபெரும் சிற்ப - ஓவியக் கலைஞனும், இலக்கியவாதியும், விஞ்ஞானியும், கட்டடக் கலை நிபுணருமான மேதையின் பெயரைத் தாங்கி நின்ற பிரம்மாண்ட விமான நிலையத்தில் இறங்கி, வழி விசாரிக்க அவசியமின்றிச் செய்த அம்புக் குறிகளையும் படங்களையும் பின்பற்றியே ரயில் நிலையத்தை அடைந்து விடலாம். அதுவும் நடக்க அவசியமின்றி கன்வேயர் பெல்ட்டில் நின்றபடி பயணித்தே போய் விடலாம். ரோமாபுரியின் மையமான இடத்தில் ரயில் பாதை முற்றுப் பெற, இறங்கி, டாக்ஸி பிடித்து ஓட்டலை அடைந்தாள்.

வெனிஸ்ஸில் இருந்ததை விட அறை விசாலமாகவும் வசதிகள் மிகுந்தும் இருந்தது. வாடகையோ குறைவு! யோசித்ததில் ஆச்சர்யம் மறைந்தது. வெனிஸ் சின்ன நகரம். ஹோட்டல்கள் குறைவு. டூரிஸ்டுகளோ ஏராளம். ரேட் உயர்கிறது. ரோம் அதற்கு நேர் மாறுதல்.

பெட்டிகளை டிராலியில் வைத்துத் தள்ளியவாறு அவளுக்கும் வழிகாட்டி அழைத்து வந்த ஹோட்டல் சிப்பந்தி, 'டிப்' பெற்றுக் கொண்டு திரும்பியதும், முதல் காரியமாக அந்த ஸூட்கேஸ்களை ஆராய வேண்டும் என்று பரபரத்தாள். மாறி மாறி வரும் ஒரே மாதிரி ஸூட்கேஸ்களை ஊர் ஊராகக் கொண்டு செல்வதன் மூலம் தான் எதையோ கடத்திப் போக சூர்யாசுவாமிக்கு உதவுவதாகத் தோன்றியது. உறுதிப்படுத்திக் கொண்டு, என்ன கடத்துகிறார்கள் என்று தெரிந்து கொள்ளவும் விரும்பினாள்.

இதில் ஆபத்து உண்டு. சூர்யாசுவாமி முன் போல் இல்லை. ஃபோனில் கடுமையாகப் பேசினார்.

அச்சத்தை ஆவல் குறுகுறுப்பு வென்றது. கதவைத் தாளிட்டு விட்டு, ஸூட்கேஸைத் திறந்து, துணிமணிகளை வெளியே எடுத்துப் போட்டு ஆராய்ந்ததில், உள் கனபரிமாணம் வெளி கன பரிமாணத்தை விடக் குறைவாக இருப்பது புரிந்தது.

வேனிடி பேக் திறந்து ஒப்பனை உபகரணங்களுக்கிடையில் இருந்த மெலிதான கத்திரிக் கோல் எடுத்து, ஒற்றைக் கூர்முனையால் பெட்டியின் அடிவாரத்தில் ஒரு மூலையில் குத்திப் பார்த்தாள். மிருதுவாக இறங்கியது. உருவிய போது வெள்ளைப் பவுடர் ஒட்டிக் கொண்டு வந்தது.

'சந்தேகமே இல்லை. போதை மருந்துதான் கடத்துகிறார்கள்.' மறுபடி துணிமணிகளை அழகாக, கச்சிதமாக அடுக்கினாள். 'இன்பாவைப் பழிவாங்குவதாக நினைத்துக் கொண்டு இப்போது இவர்களிடம் மாட்டிக் கொண்டு முழிக்கிறேன். எனக்குத் தெரியும் என்பது அவர்களுக்குத் தெரியவந்தால்...?'

'என்ன செய்து விடுவார்கள்?' என்ற ஒரு



**''வர வர எலைத்தான் டி.வி.யில் நேரடி ஒளி பரப்பு செய்வது என்றில்லாமல் போய் விட்டது.''**

**''என்ன விஷயம்?''**

**''சென்ட்ரல் ஜெயிலில் இருந்து பத்து கைதிகள் தப்பிக்கப் போகிறார்களாம். அதை நேரடி ஒளிபரப்புச் செய்ய ஒரே போட்டியாம்.''**

**- பத்மா சுந்தரம்**

வீம்பான எண்ணமும் எழுந்தது. 'இப்போது என் உதவி அவர்களுக்குத் தேவை! எனக்கு ஒன்றுமே தெரியாதது போல் நடிப்பதும் கஷ்டமல்ல...'

'அப்படி நடிப்பதன் மூலம் அவர்களுடைய அக்கிரமத்துக்குத் துணை போகிறேன்; பல்லாயிரக்கணக்கான இளைஞர்களின் வாழ்க்கை பாழாகக் காரணமாகிறேன் என்பது நிச்சயம். ஆனால் எனக்கு வேறு வழி என்ன? இப்போது முரண்டு பிடித்தால் கொலை விழும். நிகழ்ச்சி நிரலின்படி பயணத்தை முடித்துக் கொண்டு ஊர் திரும்பி விட்டால் போதும்!'

**ப**ல்வேறு ஹோட்டல்களில் தங்குவோர் நகரைச் சுற்றிப் பார்க்க பயணத் திட்டங்களும் பஸ்களும் இருந்தன. ஆங்கிலத்தில் விளக்க உரை தர விஷய ஞானமுள்ள அழகிகளும் இருந்தனர். காலை டூர், பிற்பகல் டூர், இரவு

டூர் என்று வகைக்கு ஒன்றாக டிக்கெட் பெற்றுக் கொண்டு சுற்றுலா பஸ்ஸுக்குக் குறித்த நேரத்தில் தயாராக இருந்தாள்.

ரோம் நகரமே குன்றுகளின் மீது அமைந்திருக்கிறது. சொகுசு பஸ், சாலைகளின் ஏற்ற இறக்கங்களில் சென்ற போது பழங்காலக் கட்டடங்களின் அழகு, சிலைகளின் கம்பீரம் எல்லாம் ரசிக்க முடிந்தது. குறிப்பாக குதிரை மீது மார்க்கஸ் அரேலியஸ். ஞானத்துடன் இணைந்த வீரம்!

பண்டைய ரோமாபுரி இயற்கையின் சீற்றத்தால் சிதைந்து புதையுண்டு போக, அந்தப் புராதன கட்டடங்கள் மீதே இன்று காணப்படும் தொன்மையான கட்டடங்கள் எழுப்பப்பட்டுள்ளன! ஓரிடத்தில் பஸ் நிறுத்தி, இதற்கு நிருபணம் தந்தாள் வழிகாட்டி. "இந்தக் கட்டடம் எழுப்ப அஸ்திவாரம் தோண்டிய போது, பண்டைக்கால அரண்மனை தெரிந்தது. அதன் ஒரு பகுதியை நாம் காண வகை செய்து, அதன் மீது புதிய கட்டடம் எழுப்பியிருக்கிறார்கள், பாருங்கள்!"

'சரித்திரத்துக்குள் சரித்திரமா!' என்று ஆச்சர்யப்பட்டு முடிவதற்குள், நகருக்குள் நகரமாகவும் தனிநாடாகவும் விளங்கும் வாடிகேனின் ஸெயின்ட் பீட்டர் சதுக்கம் வந்து விட்டது. நாலு கால்பந்து மைதானங்களை இணைத்தது போன்ற அதன் பரப்பளவு, வட்ட வடிவமைப்பு, மத்தியில் எகிப்திய ஊசிமுனைத் தூண், இருபுறமும் பொங்குபுனல்கள், வரிசையாக நின்ற சிலைகளின் கலையழகு எல்லாம் மூச்சடைக்க வைத்தன எனில், அந்த நிலா முற்றத்தையொட்டி அமைந்த ஸெயின்ட் பீட்டர் தேவாலயமோ, ஆண்டவனின் மகிமையை உணர்த்தவே போல் விண்ணளாவி நின்றது.

உள்ளே டூரிஸ்டுகள் மயம். அந்த ஜனநெரிசலின் மத்தியிலும் ஒரு சாந்நித்தியத்தை உணர முடிந்ததுதான் ஆச்சர்யம். வண்ணத் தூரிகை ஓவியங்களைப் போலவே தோற்றமளித்த மொஸைக் ஓவியங்களையும் வெண்கலச் சிற்ப அற்புதங்களையும் ரசித்தவாறே சுற்றி வந்த சாயா, பளிங்கினால் ஆன Pieta என்ற சிலை பார்த்துத் தன்னை மறந்தாள். தாயின் மடியில் ஏசுவின் உயிரற்ற உடல் – சிற்பியின் உயிர்ப் படைப்பாக! உயர் படைப்பாக.

சுயநினைவு பெற்ற போது, 'ஐயோ, மற்றவர்கள் நம்மைப் பிரிந்து போயிருப்பார்களோ' என்ற கவலை உந்தத் திரும்பினால், அவர்களும் அவளைப் போலவே அந்தப் புனிதத்தில் கரைந்துதான் போயிருந்தார்கள்!

இந்த அற்புதச் சிலையை உடைப்பதற்கென்றே அமெரிக்காவிலிருந்து சுத்தியுடன் விமானமேறி வந்து, யாரும் தடுப்பதற்கு முன் தன் பைத்தியக்கார முயற்சியில் சிறிதளவு வெற்றியும் பெற்று விட்டவனை, கலையுணர்வற்ற மூர்க்கன் என்பதா, மாபாதகன் என்பதா...? நல்லவேளை, சிறிதளவே சேதம். விரிசலே தெரியாமல் செப்பனிட்டு, இப்போது முன்புறம் பாதுகாப்பாக புல்லட் புரூஃப் கண்ணாடி!

சாயா சென்ற இடமெல்லாம் மைக்கலாஞ்சலோ, பெர்னினி என்ற இரண்டு மாபெரும் கலைஞர்களின் பெயர்கள் திரும்பத் திரும்ப ஒலித்தன. அவர்களும் இதர பல சிற்ப சித்திர மேதைகளும் ரோமாபுரியை உலகின் நிரந்தரக் கலைக்கேந்திரமாக்கி விட்டனர்!

டூர் முடிந்த போது, டைம் மிஷினில் பயணித்து சரித்திர காலத்தில் உலவி, திரும்ப நிகழ் காலத்துக்கு வந்து சேர்ந்தது போலிருந்தது. பசியும் தெரிந்தது. ஆப்பிள் பை (இனிப்பு சேர்த்து வேகவைத்தது), மினரல் வாட்டர் என்று வாங்கிக் கொண்டு அறைக்குத் திரும்பினாள். லிஃப்ட்டில் உயரும்போதே, 'பெட்டிகள் மாறியிருக்குமா? வெனிஸ்ஸில் இரண்டு முறை மாறினவே?' என்ற நினைப்புடன் இருந்தாள். 'அறைகளை சுத்தப்படுத்தி, படுக்கை விரிப்புக்களை மாற்றும் ஊழியர்கள் ஆங்காங்கே சூரியா சுவாமியின் வள்ளல் தன்மையால் ஆதாயம் அடைந்திருக்க வேண்டும். சாவி கொடுத்து உதவுகிறார்கள்!'

பெட்டிகள் எதிர்பார்த்தபடியே மாறித்தானிருந்தன. 'இந்த ஸூட்கேஸ்களின் அடிவாரத்தில் என்ன பதுக்கியிருக்கிறார்கள்?' நெஞ்சு படபடக்க ஆராய்ந்தாள். கத்தரிக்கோல் முனை இறங்க மறுத்தது. கடினமாக ஏதோ தட்டுப்பட்டது. ஒரு ஓரமாக அடிவாரத் துணி கத்திரித்து விலக்கிப் பார்த்த போது, கண்கள் மலர, வாய் விரிய, திகைப்பின் எல்லைக்கே மூச்சு இழுத்துக் கொண்டு போயிற்று!

(தொடரும்)



**"உங்க கிராமத்துக்குச் சாலை வசதி கேட்டிருந்தீங்களாமே! எதுக்கு?"**

**"குடிநீர் வசதி கேட்டுச் சாலை மறியல் பண்ணத்தான்!**

**- உ. ராஜாஜி**





1995 டிசம்பர் 3
யுவ கார்த்திகை 17
மலர் : 54
இதழ் : 18

# கல்கி

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.



## ஜாதியின் பெயரால் செப்பிடு வித்தை!

ரோம் நகரம் பற்றி எரிந்தபோது, நீரோ மன்னன் வயலின் வாசித்துக் கொண்டிருந்தான் என்று கதை சொல்வதுண்டு. இந்த அக்கிரமத்தின் மறு அரங்கேற்றம்தான் தமிழகத்தில், திருநெல்வேலி மாவட்டத்தில் சமீபத்தில் நடந்திருக்கிறது.

கடந்த மூன்று வாரங்களாக இப் பகுதியை ஜாதிக் கலவரங்கள் பிடித்தாட்டி வருகின்றன. இந்தக் கொடுமையான சூழ்நிலையில் தமிழக அமைச்சர்கள், நெல்லைச் சீமையில் அ.தி.மு.க. நடத்தவிருக்கும் ஐயாயிரம் ஜோடி மெகா திருமணத்துக்கு ஏற்பாடுகள் செய்ய அங்கே போய் இறங்கியிருக்கிறார்கள்.

இந்த நிகழ்ச்சியை நடத்த நெல்லையைத் தேர்ந்தெடுத்ததே, ஜாதிக் கலவர சோகங்களிலிருந்து மக்களின் கவனத்தைத் திசை திருப்பும் நோக்குடன்தான் என்பது தெளிவாகத் தெரிகிறது.

ஆனால், அமைச்சர்கள் சென்ற தினத்திலேயே தென்காசியில் போலீஸ் நடத்திய துப்பாக்கிச் சூட்டில் ஒரு பெண்மணி உயிரிழந்திருக்கிறார்.

இந்தச் சம்பவங்கள் எல்லாமே, தமிழக அரசுக்கு இந்தப் பிரச்னையை அறிவுபூர்வமாக அணுகி, தணித்து, கட்டுக்குள் கொண்டுவரும் ஆற்றல் இல்லை என்பதையே உணர்த்துகின்றன. இது மிகவும் கவலைக்குரிய நிலைதான்.




எனினும், இதனினும் கவலைக்குரிய விஷயமும் இருக்கிறது ; ஜாதி உணர்வுகளுக்கு அப்பாற்பட்டு நிற்க வேண்டிய தமிழகத் தலைவர்களே, அவ்வுணர்வுகள் இருக்க வேண்டியது அவசியம் என்று அடித்துச் சொல்லி வேரூன்றச் செய்து வருகிறார்கள். இதிலுள்ள அபாயத்தை அவர்கள் துளியும் உணர்ந்ததாகத் தெரியவில்லை.

நம் நாடு சுதந்திரம் அடைந்த கையுடனேயே, ஜாதி அடிப்படையிலான ஒதுக்கீடுகளும் சலுகைகளும் அமுலுக்கு வந்து விட்டன. கிட்டத்தட்ட அரை நூற்றாண்டு காலமாக இந்த ஒதுக்கீடுகளும் சலுகைகளும் அதிகரித்துக் கொண்டுதான் வருகின்றனவேயொழிய குறையவில்லை.

ஆனால் இவற்றைப் பெறும் மக்கள் உண்மையிலேயே அந்த ஒதுக்கீடுகளால் பயனடைந்து முன்னேறியிருக்கிறார்களா என்று ஆராய்ந்தால், ஏமாற்றம்தான் மிஞ்சுகிறது.

ஜாதியுணர்வும் அதன் பயனாக எதிர்ப்புணர்வும் மனக்கசப்பும்தான் அதிகரித்துள்ளனவேயொழிய, ஆரோக்கியமான முன்னேற்றமும் அதன் மூலம் விளையக்கூடிய தன்னம்பிக்கையும் குறைந்த அளவிலேயே கிடைத்திருக்கின்றன.

நூற்றுக்கணக்கான ஆண்டுகளாக ஒடுக்கப்பட்டவர்கள், ஐம்பதே ஆண்டுகளில் எப்படிச் சீரடைய முடியும் என்று கேட்கலாம். முற்றிலும் சீரடையாவிட்டாலும் குறிப்பிடத்தக்க முன்னேற்றம் அவர்களது வாழ்க்கையில் ஏற்படவில்லை. கல்வியும் பண்பாடும் வளர வளர, ஜாதி உணர்வுகளும் பூசல்களும் குறைந்து மறைய வேண்டும்.

இங்கு நடப்பதோ நேர்மாறாக இருக்கிறது. எதனால் இந்த இழிநிலை...?

அடுத்தடுத்து ஆட்சிக்கு வந்தவர்கள், எளியவர்களின் நலனை மெய்யாக விரும்பியிருந்தால், அவர்களுக்கு இடஒதுக்கீட்டுடன் சிறப்புக் கல்வியும் தன்னம்பிக்கையை உயர்த்தும் வாழ்க்கைக் கல்வியையும் வழங்கியிருப்பார்கள்.




ஆனால் அப்படிச் செய்து மக்களைச் சுயமாகச் சிந்திக்கக்கூடியவர்களாக மாற்றி விட்டால் ஜாதிப் பெயரில் செப்பிடு வித்தை காட்டி, சுலபமாக வோட்டு வாங்க முடியாமல் போய்விடும். இதனாலேயே தாழ்த்தப்பட்டவர்களையும் பிற்படுத்தப்பட்டவர்களையும் அதே பரிதாபத்துக்குரிய நிலையில் வைத்திருப்பதில் ஒவ்வோர் அரசாங்கமும் கண்ணும் கருத்துமாய் இருந்திருக்கிறது.

வோட்டுகளைச் சுலபமாகப் பெற்றுத் தரும் இந்த அணுகுமுறையே மக்களுக்கு ஒவ்வொரு கணமும் தங்கள் ஜாதியை நினைவூட்டுகிறது. தாழ்வு மனப்பான்மை, வெறுப்பு, வன்முறை என்ற விஷ வட்டத்துக்குள் அவர்களைச் சிறை வைக்கிறது.

காலங்காலமாக ஒடுக்கப்பட்டவர்கள் மறுவாழ்வு, புனருத்தாரணம் என்ற பசப்பல் நாடகத்தினால் மேலும் கீழேதான் தள்ளப்படுகிறார்களேயொழிய, முன்னேறுவதில்லை.

நமது சமுதாயத்தில் புரையோடி விட்ட இந்த நிலையைச் சீர்செய்வது சுலபமல்ல. இன்றைய தலைமுறையை நம்மால் கைதூக்கி விட முடியாது.

ஆனால், ஆட்சிக்கு வருபவர்கள் மனது வைத்தால், அடுத்த தலைமுறையையாவது தலைநிமிர்ந்து நடக்கச் செய்யலாம்.

இடஒதுக்கீடு என்பதை அட்மிஷன் அளவோடு நிறுத்திக் கொள்ளாமல் அந்த ஒதுக்கீட்டின் கீழ் கல்வி பெற வரும் மாணவர்களுக்கு, தலைசிறந்த ஆசிரியர்கள் மூலம் சிறப்புக் கல்வி அளிக்க வேண்டும். அவர்களையும் மற்ற முன்னேறிய மாணவர்களின் நிலைக்கு உயர்த்தி, தன்னம்பிக்கை ஊட்ட வேண்டும். 'எங்களுக்கு இனி இடஒதுக்கீடு தேவையில்லை' என்று அவர்களே சொல்லும் நிலையைச் சீக்கிரமே உருவாக்கலாம்.

கல்வியும் தன்னம்பிக்கையும் இணையும்போது, ஜாதி அடிப்படையிலான பிரிவினை எண்ணங்களும் மனக்கசப்புகளும் மடிந்து போகும். புதிய சமுதாயம் பூக்கும்.



# என்னை 'மரம் வெட்டி' என்று கொச்சைப்படுத்தாதீர்கள்!

**டாக்டர் ராமதாஸ்... ஒரு மருத்துவர்; விவசாயம் செய்பவர்; வன்னியர் சங்கத் தலைவர்; பாட்டாளி மக்கள் கட்சியின் நிறுவனர்; 'மரத்தை வெட்டுபவர்' என்று குற்றம் சாட்டப் பட்டவர்; மரக்கன்று களை நட்டுக் கொண்டிருப்பவர்; விடுதலைப் புலிகளை வெளிப்படையாகவே ஆதரிப்பவர்... என்று பல்வேறு கோணங்கள் கொண்டவர். திண்டிவனத்திலிருந்து 20 கி.மீ. தூரத்திலுள்ள தைலாபுரத்திலிருக்கும் அவரது தோட்டத்து வயல்வெளிகளில் பேட்டி கண்டோம்....**

*"வன்னியர் சங்கம் என்கிற அமைப்புத்தான் பாட்டாளி மக்கள் கட்சியாக உருமாற்றம் பெற்றிருக்கிறதா? அப்படி மாற வேண்டிய அவசியம் என்ன?"*



• சோழகங்கம் ஏரியில்...

"வன்னியர் சங்கம் என்பது வேறு; பாட்டாளி மக்கள் கட்சி என்பது வேறு. வன்னியர்களுக்கான சங்கம் என்பது இந்திய தேசிய காங்கிரஸ் ஆரம்பிக்கப்படுவதற்கு முன்பே 'வன்னியகுல சத்ரிய மகா சங்கம்' என்கிற பெயரில் இருந்திருக்கிறது. அதைத்தான் நான் இப்போது புதுப்பித்திருக்கிறேனே தவிர, புதிதாக ஏற்படுத்தவில்லை. இந்தப் புதுப்பித்தலுக்கு என்ன காரணம் என்றால், இட ஒதுக்கீடுதான். பிற்படுத்தப்பட்டவர்களுக்கான ஐம்பது சத ஒதுக்கீட்டில் 202 ஜாதிகள் பிரித்துக் கொள்ள வேண்டிய நிலை. பிற்படுத்தப்பட்டவர்களிலேயேதனிப் பெரும் மெஜாரிட்டி ஜாதியாக வன்னியர்கள் இருந்தபோதும் அந்த ஐம்பது சதத்தில் ஒரு சதம் கூடப் பெற முடியாத ஒரு நிலை. இந்த நிலை மாற வேண்டும் என்பதற்காகத்தான் வன்னியர் சங்கத்தைப் புதுப்பித்துப் போராடினோம். அதன் விளைவாகத் தான் பிற்படுத்தப்பட்டவர்கள் என்கிற பட்டியலிலிருந்த வன்னியர்கள், மிகவும் பிற்படுத்தப்பட்டவர்கள் பட்டியலில் சேர்க்கப்பட்டார்கள். வன்னியர்களுக்கான கல்வி, வேலை வாய்ப்பில் உதவுவது, தொழில் துவங்க ஆலோசனைகள் வழங்குவது, பள்ளிக்கூடங்கள், திருமண மண்டபங்கள் போன்றவற்றைக் கட்டுவது போன்ற பணிகளோடு வன்னியர் சங்கத்தின்

பணி நின்று விடுகிறது.

"யோசித்துப் பார்த்ததில் இதையும் மீறி நாங்கள் செயல்பட்டாக வேண்டிய அவசியம் இருப்பது புரிந்தது. இந்தச் சமுதாயத்தில் என்ன நடக்கறது? ஒருவன் ஒரு வேளைச் சோற்றுக்கே திண்டாடுகிறான். ஆனால் இன்னொருவனோ வெறும் கொழுப்புப் பொருள்களாகச் சாப்பிட்டு அஜீரணக் கோளாறுக்காக டாக்டரைத் தேடி ஓடுகிறான். ஏன் இந்தச் சமூக அநீதி? சமூக நீதி என்பது வெறும் இட ஒதுக்கீடு செய்து தருவது மாத்திரமல்ல; பிற்படுத்தப்பட்ட, தாழ்த்தப்பட்ட, ஒடுக்கப்பட்ட, மத ரீதியாகவும் மொழி ரீதியாகவும் சிறுபான்மையினராக உள்ள மக்களுக்குச் சமுதாய விடுதலை என்பது - சமூக நீதி என்பது - அவர்கள் பொருளாதார முன்னேற்றமும் அதிகாரப் பங்கீடும் பெறுவது தான்.

"ஆனால் இதுவரை ஆட்சிக்கு வந்த எந்தக் கட்சியுமே இதைச் செய்யவில்லை. 60-ம் ஆண்டுக்குள் 6 வயதிலிருந்து 14 வயதுக்கு உட்பட்ட அனைவருக்கும் கல்வியறிவு தர வேண்டும் என்று நமது அரசியல் சாசனத்தில் சொல்லப்பட்டிருந்தும் செய்யவில்லை. செய்திருந்தால் இந்நேரம் ஓர் அமைதியான சமுதாயப் புரட்சியே இங்கு நிகழ்ந்திருக்கும். இப்படி தப்பித் தவறி ஏதும் நிகழ்ந்து விடக்கூடாது என்பதற்காகவே சினிமா கவர்ச்சியையும் சாராய மயக்கத்தையும் கொடுத்து, அவர்களை எண்ண அளவிலேயே மழுங்கடித்து, அமுத்தியே வைத்திருக்கிறார்கள். சுருக்கமாகச் சொன்னால், ஜனங்களை வெறும் வோட்டுப் போடும் ஜடங்களாகத்தான் கருதுகிறார்களே தவிர, அந்தஸ்தும் உரிமைகளும் உடைய குடிமக்களாக இந்த அரசியல்வாதிகள் கருதுவதேயில்லை. இப்படி, ஜனநாயகமே கேலிக்கூத்தாக்கப்பட்ட ஒரு நிலை இனியும் நீடிக்கக் கூடாது என்றால், அதற்கு ஓர் அரசியல் அமைப்பு தேவை என்று உணர்ந்தோம். அதன் விளைவுதான் பாட்டாளி மக்கள் கட்சி."

***"நீங்கள் இப்படிச் சொன்னாலும் பா.ம.க. என்பது வன்னியர் கட்சி என்பது போல்தானே சொல்லப்படுகிறது...."***

"இந்தக் கட்சி ஏதோ நான்கு வன்னியர்கள் சேர்ந்து ஆரம்பித்துவிட்ட கட்சி அல்ல. எல்லா ஜாதி மக்களையும் அழைத்துப் பேசி ஆரம்பிக்கப்பட்ட கட்சி. அதிகாரப் பங்கீடு எல்லா ஜாதியினருக்கும் சமமாகக் கிடைக்க வேண்டும் என்பதற்காகத்தான் முதலாண்டு ஒரு தலித் முதல்வராக இருந்தால்,





**"இந்த வாளியின் விலையைக் கொஞ்சம் குறைச்சுச் சொல்லுங்கோ."**
**"லொள் லொள்.... 50 ரூபாய்.... லொள் லொள்!"**

**— வசந்தாகாந்த்**

அடுத்த ஆண்டு மிகவும் பிற்படுத்தப்பட்டவர், மூன்றாம் ஆண்டு பிற்படுத்தப்பட்டவர், நான்காம் ஆண்டு ஒரு சிறுபான்மையினர், ஐந்தாம் ஆண்டு முற்பட்ட ஜாதியைச் சேர்ந்தவர் என்று சுழற்சி முறையில் முதல்வர்களாக இருக்க வேண்டும்; அப்போதுதான் எல்லா ஜாதியினருக்கும் சமூக நீதி கிடைப்பதாக இருக்கும் என்று கட்சியின் கொள்கையாகவே வைத்திருக்கிறோம்.

"இப்படி ஒவ்வோர் ஆண்டும் ஒவ்வொருத்தர் முதல்வராக இருந்தால் நிர்வாகம் எப்படி தொய்வில்லாமல் நடக்கும் என்று நீங்கள் கேட்கலாம்! தொடர்ந்து ஒருவரே முதல்வராக இருந்த போது மட்டும் என்ன கிழித்து விட்டார்கள்? நிர்வாகத்தை நடத்துபவர்களெல்லாம் அதிகாரிகள்தான். முதல்வராக இருப்பவர் வெறுமனே கண்காணித்துக் கொண்டிருந்தாலே போதும். அப்புறம் எங்கள் கட்சி வன்னியர்களுக்கான கட்சிதான் என்றால், பொதுச் செயலாளராக ஒரு தலித்தும், பொருளாளராக ஒரு முஸ்லீமும் துணைத் தலைவர்களாக நாடார், யாதவர், வண்ணார், நாவிதர், அருந்ததியர், தேவேந்திர குல வேளாளர் என்று பலரும் பொறுப்பு வகிக்க வேண்டிய அவசியமென்ன? கூடலூர், மேட்டுப்பாளையம், நாகர்கோவில் போன்ற தென் மாவட்டங்களில் ஒரு வன்னியர் கூடக் கிடையாது. அங்கெல்லாம் எங்கள் கட்சி வலுவாக இருக்கிறதே அது எப்படி? பா.ம.க. வளரக் கூடாது என்று நினைப்பவர்கள்தான் என்னை 'மரம்வெட்டி' என்றும் பயங்கரவாதி என்றும் இது வன்னியர் கட்சி என்றும் கொச்சைப்படுத்துகிறார்களே தவிர, உண்மை அதுவல்ல!"

***"உங்கள் கட்சியின் ஒரே எம்.எல்.ஏ.வாக இருந்த பண்ருட்டி ராமச்சந்திரனை நீங்கள் நீக்க வேண்டிய ஒரு சூழ்நிலை எதனால் ஏற்பட்டது?"***

"அவர் வன்னியராக இருந்தாலும் கூட கட்சியின் மூலமாக, அவரும் நெல்லிக்குப்பம் கிருஷ்ணமூர்த்தியும் சொந்த ஆதாயம் தேடப் பார்த்தார்கள். இதுமட்டுமின்றி, ராணிப்பேட்டை இடைத் தேர்தலில் காங்கிரஸுக்கு நாங்கள் நிபந்தனையற்ற ஆதரவு தருவதாக அறிவித்தோம். காட்கிலோ எங்கள் கட்சியின் ஆதரவே தேவையில்லை என்று அறிக்கை விட்டார். அது எங்களுக்குப் பெருத்த அவமானமாகப் போய் விட்டது. இதற்கெல்லாம் காரணம் பண்ருட்டிதான். எனவேதான் கட்சியிலிருந்து அவர்களை விலக்க வேண்டியதாயிற்று. கட்சியைக் கைப்பற்றும் அவர்களது முயற்சியும் தேர்தல் கமிஷனால் தோற்கடிக்கப்பட்டு விட்டது."

***"நீங்கள் சொல்வதை வைத்துப் பார்க்கிற போது, ஒவ்வொரு ஜாதிக்காரரும் ஒவ்வோர் ஆண்டுக்கு முதல்வர் என்கிற சுழற்சி முறை கடைப்பிடிக்கப்பட்டாலும் அவர்களெல்லாம் தங்கள் இன மக்களின் முன்னேற்றத்துக்குத்தான் பாடுபடுவார்கள் என்பதற்கு உத்தரவாதம் இல்லையே?"***

"அதனால்தான் கட்சிக்கு வரும் போதே அது மாதிரி போதிக்கிறோம். குறிப்பாக தாழ்த்தப்பட்ட, ஒடுக்கப்பட்ட மக்களின் பிரதிநிதிகளாக இருப்பவர்கள் கட்டாயம் அந்த மக்களின் முன்னேற்றத்துக்குத்தான் முன்னுரிமை கொடுக்க வேண்டும். ஒரு பிரச்னையில் கட்சியா, ஜாதியா என்கிற கேள்வி எழுகிற போது; 'நான் கட்சிப் பக்கம்தான் நிற்பேன்' என்று சொல்வதை நான் ஒப்புக் கொள்வதில்லை. 'நீ ஜாதிப் பக்கம்தான் நிற்க வேண்டும்' என்று சொல்லுகிறேன். இந்த இடத்தில் நீங்கள் கவனமாகப் புரிந்து கொள்ள வேண்டும் என்பதற்காக ஓர் உதாரணம் சொல்கிறேன். இப்போது கொடியன்குளம் பிரச்னை. தாழ்த்தப்பட்டவர்கள் போலீஸாராலேயே அடித்து நொறுக்கப்பட்ட கொடுமை. அதற்கு, அம்பேத்கார் போட்ட பிச்சையில் - ரிசர்வ் தொகுதிகளில் இருந்து தேர்ந்தெடுக்கப்பட்ட 44 எம்.எல்.ஏக்களில் யார் ஓங்கிக் குரல் கொடுத்தார்கள்? ஒருவருமே இல்லை. எந்தத் தாழ்த்தப்பட்ட மக்களால் இந்த 44 பேரும் தேர்ந்தெடுக்கப்பட்டார்களோ, அவர்களுடைய பிரச்னைக்குக் குரல் கொடுக்க வேண்டாமா? கேட்டால் கட்சித் தலைவர் அல்லது தலைவி இல்லையென்றால் கட்சிக் கட்டுப்பாடு என்று காரணம் சொல்வார்கள். இந்த நிலையில்தான் கட்சியா, ஜாதியா என்கிற போது ஜாதியின் பக்கம் நிற்க வேண்டும் என்கிறேன். இதைத்தான் வலியுறுத்தவும் செய்கிறேன்."

***"'மரம்வெட்டி' என்று உங்களைக் கொச்சைப்படுத்தவதாகச் சொன்னீர்கள். ஆனா***

# "TABE சிகிச்சை பெற்றதற்காக மகிழ்ச்சி அடைகிறோம்....."



"நான் 2 வருடமாக 2 முட்டியிலும் கடுமையான ஆஸ்டியோ-ஆர்த்ரிட்டிஸ் வலியினால் மிகவும் அவதிப்பட்டேன். சாதாரணமான வீட்டு வேலைகள் கூட எனக்கு கடினமாக தோன்றியது. நான் என் தலை விதியை ஏற்றுக்கொண்டேன்..... அப்பொழுது வெற்றிகரமாக சிகிச்சை பெற்ற நோயாளிகள் அளித்துள்ள அத்தாட்சி சான்றிதழ்கள் TABE விளம்பரத்தில் பார்த்து எனக்கு அங்கு செல்ல ஆர்வம் வந்தது. முதல் 15 நாட்களுக்குள், எனக்கு நல்ல நிவாரணம் தோன்றியது. ஆர்த்ரிட்டிஸ் பிரச்சனையால் அவதிப்படுபவர்களுக்கு, TABE சிகிச்சையை நான் சிபாரிசு செய்கிறேன், ஏனென்றால் எனக்கு இது ஒரு வரமாக உள்ளது".

R. Vasantha

திருமதி. R. வசந்தா
2, 16வது அவென்யூ, 77வது தெரு, அசோக் நகர், சென்னை - 83.

"5 வருடங்களாக என் முதுகிலும் கால்களிலும் லம்பார் ஸ்பாண்டிலிட்டிஸ்னால் கடுமையான வலி அனுபவித்தேன். நான் வீட்டிலேயே ஊனமுற்றவன் போல் அகப்பட்டிருந்தேன். வேறு வழியின்றி நான் TABE சிகிச்சையை முயர்ச்சி செய்ய முடிவெடுத்தேன். சிகிச்சை ஆரம்பித்து 20 நாட்களுக்குள், என்னால் வீட்டுக்குள்ளே நடமாடவும், சிறிய வேலைகளை செய்யவும் முடிந்தது.

நான் TABE சிகிச்சை பெற்றுவிட்டு ஒரு வருடகாலத்திற்கு மேலாகியும் எனக்கு இப்பொழுது வலியில்லை என்று நினைக்கும் பொழுது நான் மிகவும் மகிழ்ச்சி அடைகிறேன். நான் அவதிப்பட்டது போல் வேறு எவரும் அவதிப்படக்கூடாது. இதே பிரச்சனை வேறு எவருக்காவதும் இருந்தால், மனம் தளர வேண்டாம்-ஏனென்றால் TABE சிகிச்சையினால் பலனடையமுடியும்".



திரு. I.B. மேனன்
62, பொரக்கா ரோடு, சென்னை - 10.



"பெரியார்த்ரிட்டிஸ் பிரச்சனையால் என்னுடைய வலது தோள் பட்டையில் விடாத வலிகாரணமாக எனக்கு கூடியவரையில் ஒன்றும் செய்ய இயலவில்லை. என் முடியை வாருவதற்கு கூட உதவி தேவைப்பட்டது. என்னால் தனியாக பயணம் செய்ய முடியவில்லை, மற்றும் என்னுடைய மனவுறுதி முழுவதும் இழந்தேன். வெளிநாட்டில் இருக்கும் என் மகளுக்கு கடிதம் எழுத முடியாதது, மற்றதை விட மிகவும் கொடுமையாக தோன்றியது. சில சமயங்களில் விரக்தியினால் நான் அழுததும் உண்டு. சிகிச்சை தொடங்கி 30 நாட்களுக்குள் அளவிடமுடியாத முன்னேற்றம் இருந்தது. இப்போது என்னுடைய வலது கையை முன்பு போல் உபோயகிக்க முடிகிறது. நான் பழைய நிலைமைக்கு வந்ததை நினைத்து, நானும் என் மகளும் மிகவும் மகிழ்ச்சி அடைகிறோம்".

J. D'Souza

திருமதி. ஜோசஃபீன் டி'சூசா
45, அருணாசலம் தெரு, பெரம்பூர், சென்னை - 7.

## "எங்களுடைய சிகிச்சை முடிந்துவிட்டு ஒரு வருடமாகி விட்டது !"

★ TABE சிகிச்சை மூலிகை பலுப்டிஸ் (poultice) உடலின் வெளிப்புறம் தடவுவது மட்டுமே. ★ அலோபதி மற்றும் ஆயுர்வேத மருத்துவர்கள் சிகிச்சை திட்டத்தை மேற்பார்வையிடுகிறார்கள். ★ இரு வேறு நபர்கள் ஒன்றுபோல் இருப்பதில்லை. இதை TABE சிகிச்சை நிலையங்கள் நன்கு உணர்ந்துள்ளன. எனவே, காலம் மற்றும் விளைவுகளைப் பொறுத்தவரை சிகிச்சையும் பலன்களும் வேறுபடலாம். ★ நோயாளிகள் அளித்துள்ள அத்தாட்சி சான்றிதழ்கள் எங்களிடம் இருக்கின்றன.

ஆஸ்டியோ-ஆர்த்ரிட்டிஸ், ரியுமேட்டாய்டு ஆர்த்ரிட்டிஸ், ஸ்பாண்டிலிட்டிஸ், தோள் பிடிப்பு, முதுகு வலி, கால்களியல் ஸ்பர் ஆகிய நோய்களுக்காக....

இப்போதே அணுகுங்கள்: சந்திக்கும் நேரத்தை குறிக்க தொடர்பு கொள்க: 1, ஸ்ரீரங்கம் அவின்யூ, 53, பாந்தியன் சாலை, எழும்பூர், சென்னை - 8 போன்: 8553772

காலை 9.00 மணி முதல்: இரவு 7.00 மணி வரை.
ஞாயிறு உள்பட எல்லா நாட்களும் திறந்திருக்கும்.
முக்கிய கிரெடிட் கார்டுகள் அனைத்தும் ஏற்றுக்கொள்ளப்படும்.





மரத்தடி ஜோசியர் முதல் மாத பலன் எழுதும் திலகங்கள் வரை ஒருத்தர் விடாமல் விளாசித் தள்ளுகிறார் பாம்பே சாணக்யா -

வளமான கற்பனையுடன் 'ஜோசியம்' சொல்லி ஏமாற்று வோர் ஒருபுறம்; பஸ் டிக்கெட் முதல் பங்கு மார்க்கெட் ஷேர் வரை அனைத்தையும் ஜோசியம் பார்த்தே வாங்குவது என்று பித்துப் பிடித்து அலைவோர் இன்னொருபுறம்....

இந்த இரு தரப்பினருமே அறியாத, விஞ்ஞான ஆதாரத் துடன் கூடிய ஜோதிட சாஸ்திரம் இருக்கிறது; அது வலிமை மிக்கது என்பதே சாணக்யாவின் 'சூர்யவம்சம்' நாடகத்தின் மையக் கரு.

இதனைச் சொல்வதற்கு, நாடகத் தன்மைக்கேற்ற கதை; வலுவான வசனங்கள்; கவனத்தை திசை திருப்பாத காட்சி அமைப்புகள்; திறமை யான இயக்கம்; ஈடுபாடு நிறைந்த நடிப்பு (குறிப்பாக ஜோதிடர் வேதநாயகம்பிள்ளை பாத்திரத் தில் குமார் மற்றும் அவர் மக னாக நடிக்கும் சுந்தர்) என்று பல அம்சங்களும் கை கொடுத்திருக் கின்றன.

மரத்தடி போலி ஜோசியராக இருந்து பின்னர் ஜோசியத்தை முறையாகப் பயின்று அரசியல் வாதிகளின் அட்வைசர் லெவ லுக்கு உயரும் வேதநாயகம் பிள்ளை. அவர் மகன் நிர்மல், ஜாதக ராசிப்படி, வாழ்க்கையில் வெற்றி பெற கலைத் திறமை வாய்ந்த பெண்ணை மணக்க வேண்டும். எனவே மேடைப் பாடகி காவேரியை திருமணம் செய்து கொள்ள விருப்பம் தெரி விக்கிறார், அவள் ஊனமுற்றவள் என்று தெரிந்த பின்பும்.

சில சிக்கல்கள் தோன்றி விடுவிக்கப்பட்டு, ஒருவழியாகத் திருமணம் நடக்கிறது. ஆனால் புது மணப்பெண் திடீரென்று இறந்து விடுகிறாள்.

'இந்தத் திருமணம் நடந்தால் மணப்பெண் குடும்பத்தில் ஒருவர் இறந்து போவார்' என்று வேதநாயகம் பிள்ளை சொன்ன ஜோசியம் பலிக்கிறது!

இந்த முடிவு நாடகத்தின் பல வீனம் என்றால், ஜோதிடம் குறித்த நம்பிக்கைக்கும் அவநம் பிக்கைக்கும் இடையே ஊச லாடும் கதாபாத்திரங்களின் யதார்த்தமே அதன் பலம்!



னும் மரம் வெட்டப்பட்டது என்பது உண் மைதானே?''

''நானும் மறுக்கவில்லை. ஆனால் தொடர்ந்து ஏமாற்றப்பட் மக்கள், தங்களது கோரிக்கைக்காகப் போராடுகிறார்கள்; ஒரு மாதம் முன்பாகவே சாலை மறியலை அறி வித்து விட்டுத்தான் போராடுகிறார்கள். அந்தக் கால அவகாசத்தில் அரசு இவர்களை அழைத் துப் பேசாமல் அலட்சியப்படுத்துகிறது. இந்த நிலையில் சாலை மறியல் போராட்டம் அறி வித்தபடி நடத்தப்படுகிறது. மறியல் துவங்கிய முதல் நாளே விழுப்புரம் வட்டத்தில் பதி னொரு பேர் சுட்டுக் கொல்லப்படுகிறார்கள். இதனால் மக்கள் கொதித்துப் போன நிலையில் அடுத்த நாள் மரங்களை வெட்டிப் போட்டுப் போராடுகிறார்கள். இது யாரும் சொல்லிக் கொடுத்து நடக்கவில்லை. நாகர்கோவிலில் காம ராஜர் பீடத்தை இடிப்பதற்காகக் கை வைத்தது தெரிந்தவுடனேயே தன்னிச்சையாக அங்கே பஸ்கள் கொளுத்தப்படவில்லையா? யாரும் அறிக்கைவிட்டா செய்தார்கள்? அதே போல் தான் இவர்களும் செய்தார்கள். அதிகபட்சம் போனால் சுமார் நூறு மரங்கள் வெட்டப்பட் டிருக்கலாம். இதைத்தான் எல்லோரும் மிகைப் படுத்திவிட்டார்கள்.

''இப்படிச் சொல்வதாலேயே அப்போது மரங்கள் வெட்டப்பட்டதை நான் நியாயப் படுத்தவில்லை. நூறு என்ன, ஒரு மரத்தை வெட்டினாலும் அது தவறுதான். என்னுடைய ஆதங்கமெல்லாம் தன்னிச்சையாக நடந்த ஒரு விஷயத்தை மிகைப்படுத்திக் காட்டிக் கொச் சைப்படுத்தி விட்டார்களே என்பதுதான்!''

''இப்போது உங்களைச் சந்திக்க வருகிற கட்சிக்காரர்களெல்லாம் ஐந்து மரக்கன்று களுடன்தான் வந்து சந்திக்க வேண்டும் என்று நிபந்தனை விதித்திருக்கிறீர்கள். நீங்கள் செல்லுகிற இடங்களிலும் மரக்கன்றுகளை நடுகிறீர்கள்... இதெல்லாம் நீங்கள் முன்பு மரம் வெட்டியதற்குச் செய்கிற பிராயச் சித்தம்தான் என்றும் சொல்கிறார்களே?''

''இப்படிச் சொல்பவர்களின் நோக்கம் மேலும் என்னைக் கொச்சைப்படுத்த வேண் டும் என்பதுதான். உண்மையில் இந்த ராமதாஸ் யார் என்பதை அவர்கள் புரிந்து கொள்ள வேண்டும். கட்சி, சங்கம் என்கிற சிந்தனை யெல்லாம் இல்லாத 75 களில் நான் சிகிச்சை செய்வதற்காக கிராமப்புறங்களுக்குச் செல்கிற போது, எனது சொந்தச் செலவில் தென்னங்

கன்றுகளை வாங்கிக் கொடுத்து நடச் சொல்லுவேன். அதோ தெரிகிறதே... மரமல்லி மரம் அதனருகில் ஏழடிக்கு ஐந்தடி என்கிற அளவில் ஒரு பெரிய போர்டு வைத்திருந்தேன். அதில், 'தென்னை நான் அன்னை தேர்ந்தெடுத்து என்னை வளர்ப்பீராகில்....' என்று தென்னையின் சிறப்புக்களையெல்லாம் ஒரு கவிதையாக எழுதி வைத்திருந்தேன். திண்டிவனத்திலுள்ள கோவிந்தசாமி கலைக் கல்லூரியிலுள்ள பெரும்பாலான மரங்கள் நான் நட்டு வளர்ந்தவை தான்.

"எனது தோட்டத்தைச் சுற்றிப் பார்க்கலாம் வாருங்கள்..... (அழைத்துச் செல்கிறார்) வேப்ப மரம் ஒரு மிகச் சிறந்த கிருமி நாசினி என்பதால் வேப்ப மரம் வைத்திருக்கிறேன். இதோ, இந்த மரம் ஜப்பானில்தான் அதிகம் இருக்கிறது; இங்கே அரிதானது என்றார்கள். உடனே அதில் ஒன்று வாங்கி வந்து நட்டு வளர்க்கிறேன். என் உடம்பில் ஓடுவது விவசாய ரத்தம். அதனால் உங்களோடு நான் பேசுவது போலவே இந்த மரங்களோடும் பேசுவதாக உணர்கிறேன். செயற்கை உரம் போடுவது கூட இந்த மரங்களைப் பாதிக்கும் என்பதால் இயற்கை உரங்களையே போடுகிறேன். இது பொய்யல்ல நிஜம். (தோண்டிக் காட்டுகிறார்) தமிழகம் எங்குமே பசுமையாக இருக்க வேண்டும்; அப்போதுதான் சுற்றுச் சூழல் பாதுகாக்கப்படும் என்பதை மக்களுக்கு விளக்கி, மரக்கன்றுகளை நடச் செய்வதற்காகவே அரசியலுக்கெல்லாம் அப்பாற்பட்ட 'பசுமைத் தாயகம்' என்கிற தொண்டு நிறுவனத்தை ஏற்படுத்தியிருக்கிறேன். அண்மையில் கூட அதன் சார்பில் திருச்சி மாவட்டத்திலுள்ள கங்கைகொண்ட சோழபுரத்திலிருக்கும் சோழகங்கம் என்கிற பொன்னேரியின் கரைகளில் இரண்டாயிரம் மரக்கன்றுகளை நடச் செய்திருக்கிறேன். நடுவதோடு மட்டுமல்ல; அவற்றைப் பராமரிக்கச் செய்வதிலும் கவனமாக இருக்கிறேன். என்னைக் கேட்டால், பள்ளிகளிலும் கல்லூரிகளிலும் மரம் நட்டுப் பாதுகாப்பதைக் கூட ஒரு கட்டாயப் பாடமாக்க வேண்டும். அதில் மார்க் வாங்காமல் தேர்ச்சி பெற முடியாது என்கிற நிலை வர வேண்டும். இதோடு வேலை வாய்ப்பு, பதவி உயர்வு போன்றவற்றுக்குக் கூட மரங்கள் நட்டுப் பாதுகாக்கிறவர்களுக்குத்தான் முன்னுரிமை என்கிற நிலை வர வேண்டும் என்பேன்."

***"அண்மையில் நீங்கள் 'கலைஞரை முதலமைச்சராக்குவோம்' என்று அறிவித்திருக்கிறீர்கள். எதன் அடிப்படையில் இந்த அறிவிப்பைச் செய்தீர்கள்?"***

"நாங்கள் இப்போது ஏழு கட்சிக் கூட்டணியை அமைத்திருக்கிறோம். இதுதான் பலமான கூட்டணி என்று நம்புகிறோம். உண்மையும் கூட. இந்தக் கூட்டணி ஆட்சிக்கு வருகிற போது யார் முதலமைச்சர் என்று மக்களுக்குச் சொல்ல வேண்டுமல்லவா, அந்த அடிப்படையில்தான் கலைஞரை முதல்வராக்குவோம் என்று அறிவித்திருக்கிறோம்."



"அவர் எம்.ஜி.ஆர் ரசிகரா இருப்பார் போலிருக்கு?"
"எப்படிச் சொல்றீங்க?"
"சட்ட மன்றத்திலே யார் இருக்காங்கன்னு கேக்கிறேன், 'அலிபாபாவும் நாற்பது திருடர்களும்ங்கிறார்!"
— தஞ்சாவூர் ராஜபாரதி

***"நீங்கள் சொல்லுகிற சுழற்சிமுறை - ஆண்டுக்கு ஒரு முதலமைச்சர் - என்கிற கொள்கையைக் கூட்டணி ஆட்சியிலும் வற்புறுத்துவீர்களா?"***

"இல்லை. பா.ம.க. தனித்து நின்று ஆட்சியைப் பிடிக்கும் போதுதான் அந்த விதி கடைப்பிடிக்கப்படும். கூட்டணி ஆட்சியில் கேரளா, மேற்கு வங்கம் மாதிரி கூட்டணி அமைச்சரவை ஏற்பட வேண்டும் என்றுதான் சொல்லுவோம்."

***"இந்தக் கூட்டணி அமைச்சரவைக்குக் கலைஞர் ஒப்புக் கொண்டிருக்கிறாரா?"***

"இன்னும் அதுபற்றி நாங்கள் பேசவில்லை. ஒப்புக் கொள்வார் என்று நம்புகிறோம். காரணம், இனி மத்தியிலும் சரி, மாநிலங்களிலும் சரி கூட்டணி அமைச்சரவை என்பதை நிராகரித்துவிட முடியாது; தவிர்க்க முடியாது."

***"ஆட்சியிலிருந்து ஜெயலலிதாவை அகற்ற வேண்டும் என்பதில் எதிர்க்கட்சிகளிடையே ஒருமித்த கருத்து இருந்தாலும் தங்களுக்குள் ஒற்றுமையின்றி மூன்றுமுனைப் போட்டி, நான்கு முனைப் போட்டி என்று வருகிற போது அது ஜெயலலிதாவுக்குத்தானே சாதகமாக அமையும்?"***

"அதற்குத்தானே ஏழு கட்சிக் கூட்டணி! ஜெயலலிதா மேல் மக்களுக்கு இருக்கும் வெறுப்பு கொஞ்ச நஞ்சமல்ல என்பதால், எத்தனை முனைப் போட்டியாக இருந்தாலும் அதில் நல்ல ஆட்சியைத் தருகிற அணி எது என்று தேர்ந்தெடுத்துத்தான் மக்கள் வாக்களிப்பார்கள். அதோடு எந்தக் கட்சியையும் சாராத,

அதே சமயத்தில் இந்த ஆட்சி மாற வேண்டும் என்று நினைக்கிற மக்கள் எப்போதும் பத்து சதமாவது இருப்பார்கள். அவர்களின் வாக்கு களும் வெற்றியைத் தீர்மானிக்கும் ஒரு முக்கிய விஷயமாக இருக்கும் என்பதால் எங்கள் கூட் டணி வெற்றி பெறும் என்பதில் உறுதியாக இருக்கிறோம்."

***"அண்மையில் 'கச்சத்தீவை மீட்போம்' என்று சொல்லிச் சென்றீர்கள்... அது ஒரு தமாஷ் போலத்தானே இருந்தது?"***

"அது ஒன்றும் தமாஷ் இல்லை. கச்சத்தீவு இராமநாதபுரம் ராஜாவுக்குச் சொந்தமாக இருந் தது என்பதற்கான ஆவணங்கள் இருக்கின்றன. இருந்தும் ஏதோவொரு சூழ்நிலையில் அதைத் தூக்கிக் கொடுத்து விட்டார்கள். அதனால் இப் போது மீன் பிடிக்கப் போகும் மீனவர்கள் ஓய் வெடுத்து வரவோ, வலைகளை உலர்த்தவோ



"பக்கத்து வீட்டு பார்வதி கூட கொஞ்ச நேரம் ஊர் உலக விஷயங்களைப் பற்றி பேசிட்டு வந்துடறேன்..."

"என்னைக்கு வருவேன்னு கரெக்டா சொல்லிட்டுப் போயிடு!"

— சீர்காழி வி. ரேவதி

முடியாமல் சிரமப்படுகிறார்கள். அதோடு இராணுவ ரீதியிலும் அது நமக்கு முக்கிய மானது என்பதால்தான் அது பற்றிய விழிப் புணர்வை மக்களிடம் உருவாக்குவதற்காகச் சென்றோம். எங்களைத் தடுத்து நிறுத்தி விட்டாலும் கச்சத்தீவின் முக்கியத்துவம் பற்றிய விழிப்புணர்வை மக்களிடம் தொடர்ந்து உண்டாக்குவோம்."

***"விடுதலைப் புலிகளின் தலைவர் பிரபா கரனை, இந்திய அரசு, ராஜீவ் கொலை வழக் கில் ஒரு குற்றவாளியாக அறிவித்திருக்கிறது. ஆனால் நீங்களோ ஆதரிக்கிறீர்கள். எந்த அடிப்படையில் ஆதரிக்கிறீர்கள்? எப்படி?"***

"இப்போது நடந்து கொண்டிருக்கும் ஜெயின் கமிஷன் விசாரணைகள் முடிந்தால் தான் முழு உண்மைகளும் வெளிவரும். விடு தலைப் புலிகள் தமிழகத்தில் செய்கிற வன் செயல்களை ஆதரிக்க முடியாது என்றாலும் இலங்கைத் தமிழர்களுக்கு விடுதலைப் புலி களால் மட்டும்தான் பாதுகாப்பளிக்க முடியும் என்று உலகம் முழுவதிலுமுள்ள தமிழர்கள் நம்புகிறார்கள். அதனால்தான் ஆதரவும் பண உதவியும் செய்து கொண்டிருக்கிறார்கள். அந்த வகையில் விடுதலைப் புலிகளின் போராட் டத்தை நாங்கள் அன்றும் ஆதரித்தோம்; இன்றும் ஆதரிக்கிறோம்; இனியும் ஆதரிப் போம். இதில் மாற்றமே இல்லை."

***"வன்னிய இளைஞர்களை நான்தான் அடக்கி வைத்திருக்கிறேன். இல்லையென் றால் அவர்கள் வன்முறையாளர்களாக மாறி விடுவார்கள்!' என்று நீங்கள் பேசியதாகச் செய்தி வந்தது...."***

"விழுப்புரத்தில் நடந்த வன்னியர் சங்க மாநாட்டில பேசினேன். வன்னியர்களுக்குக் கிடைக்க வேண்டிய நியாயமான பங்கு இது வரை எந்தத் துறையிலும் கிடைக்கவில்லை. இந்த நிலையே தொடருமானால் வன்னிய இளைஞர்களின் தீவிரமான போராட்டத்தைத் தவிர்க்க முடியாமல் போய்விடும் என்று பேசினேன்."

***"அப்படியொரு தீவிரமான போராட்டம் ஏற்பட வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டால், மீண்டும் அந்த இளைஞர்கள் மரங்களை வெட்டமாட்டார்கள் என்று உறுதியளிக்க முடியுமா?"***

"இத்தனை தூரம் நான் விளக்கிய பிறகும் நீங்களும் என்னை 'மரம்வெட்டி' என்று முத் திரை குத்துவதிலேயே குறியாக இருக்கிறீர்களே என்பதுதான் சங்கடமாக இருக்கிறது. சுற்றுச் சூழலின் அவசியத்தை உணர்ந்து, மரக்கன்று களை நடுகிற இளைஞர்கள் அதை எப்படி வெட்டுவார்கள்? அந்த மனோநிலை எப்படி ஏற்படும்?"

***"இந்த உறுதியான பதிலுக்காகத்தான் அப்படியொரு கேள்வியைக் கேட்டேன்; சங்கடப்படுத்த வேண்டும் என்கிற நோக்கத் தில் அல்ல. பிற்படுத்தப்பட்ட, தாழ்த்தப் பட்ட, ஒடுக்கப்பட்ட மக்களுக்கு பொருளா தார முன்னேற்றமும் அதிகாரப் பங்கீடும் கிடைக்கச் செய்வதுதான் கட்சியின் நோக் கம் என்கிறீர்கள். அப்படிப் பார்த்தால் முதல் வரின் உடன் பிறவா சகோதரி என்கிற அள வுக்கு நீங்கள் சொல்லுகிற பட்டியலிலுள்ள சசிகலாதானே உயர்ந்திருக்கிறார்....!"***

"அதுவல்ல நான் சொல்கிற வளர்ச்சி... தமிழகத்தையே சுருட்டுகிற கிரிமினல்தனத்தை ஒருபோதும் ஆதரிக்க முடியாது."

பேட்டி : **இளங்கோவன்**

அட்டை வண்ணப்படமும் படமும் : **யோகா**




# நெல்லை பெனிபிட் பண்ட் லிமிடெட்

26, ரங்கநாதன் தெரு, முதல் மாடி, தி.நகர், சென்னை-17.
4345178

**பரிசு! பரிசு! பரிசு!**
**14 கிராம் தங்க செயின்**

1. பிக்சட் டெபாசிட் 21% + 3% போனஸ்
2. பென்ஷனர் டெபாசிட் 22% + 3% போனஸ்
3. கல்வி உதவி டெபாசிட் 24% + 3% போனஸ்

4. கரேகா டெபாசிட் :

| செலுத்தும் தொகை ஒரு தரம் மட்டும் | காலம் | முதிர்வு தொகை |
|---|---|---|
| ரூ. 1000 | 23 வருடம் | ரூ. 1,00,000 |

5. பிறந்த நாள் டெபாசிட் :



| செலுத்தும் தொகை ஒரு முறை மட்டும் | வருடம் தோறும் பிறந்த நாள் அன்று | திருமணத்தின் போது கிடைக்கும் தொகை |
|---|---|---|
| ரூ. 4250 | ரூ. 1000 | ரூ. 5000 |

6. வாரிசுதாரர் டெபாசிட் :

| ஒருமுறை செலுத்தும் டெபாசிட் | காலம் | மாதாமாதம் பெறும் தொகை |
|---|---|---|
| ரூ. 10,000 | 180 மாதம் | ரூ. 7,500 |
| | 300 மாதம் | ரூ. 15,000 |

வீடு நிலம் தங்க நகைபேரில் கடன் வழங்கப்படும்



# மணமக்கள் தேவை
# கம்யூட்டர் ஜாதகம்

அனைத்து சமூகத்திலும், ஆயிரக் கணக்கான வரன்கள் பெற உடன்பதிவு செய்ய தொடர்பு கொள்ளவும்.

கம்யூட்டர் ஜாதகங்கள் நொடிப் பொழுதில் ஆங்கிலம், தமிழ் ரூ.40/-, எதிர்கால கணிப்புடன் ரூ.120/-

ASTROLOGY SOFTWARE FOR SALE.

**Swayamvaralaya**
(GOVT. REGD.)

18, ஸ்டேஷன் ரோடு, மேற்கு மாம்பலம், சென்னை-33.
போன்: 425822,
7-ஏ, சாந்திவிஹார் காம்ப்ளக்ஸ், லஸ், சென்னை-4.
போன்: 846278,

88,1, 16th Cross, 6th Main, Malleswaram,
Bangalore - 560 055. Ph: 3340146.





ADYAR
# STUDENTS XEROX

*Quality that is close to perfection*

XEROX
LASER PRINTING
WORD PROCESSING
DTP
ELECTRONIC &
MANUAL TYPING
BINDING &
LAMINATION

அவர் ஒரு பெரிய ஞானி. ஆசுகவி பாடும் ஆற்றல் மிக்கவர். முருகக் கடவுள் அருள் வேண்டி தம்மை வருத்திக் கொண்டு வழி பட்டவர். அறுமுகன் அடியராய் விளங்கினா லும் வேறு தெய்வ வழிபாட்டை வெறுத்த தில்லை. மற்றைய தெய்வ வடிவங்களை மதிக்க மறுத்ததில்லை. தமிழ்மேல் கொண்ட தனிப் பட்ட காதலால் புலவர்கள் வரலாற்றையே பாட்டாகப் புனைந்து பாடிக் கொடுத்தவர். அவர் முருகன் அடியார் எனினும், பல தெய் வங்களை வழிபட்ட புலவர்கள் புராணம் பாடிய காரணத்தால் அந்தப் புலவர்களைப் போற்றிய பிற தெய்வ வழிபாட்டினரும் அவரை மதித்துப் போற்றினர்.

அவர்தாம் வண்ணச் சரபம் தண்டபாணி சுவாமிகள். அவர்கள், புலவர்கள் புகழ் விளக் கும் நூலை அரங்கேற்றி விளக்க உரை வழங்கி னார்கள். நாள்தோறும் பல தெய்வ பக்தர்கள் அந்த விரிவுரைக்குத் தவறாது வந்தனர். விரி வுரை நிகழ்ந்த இடமோ முருகன் கோவில். பல தெய்வ அன்பர்கள் தயக்கம் இன்றி வந்தா லும் சுவாமிகட்கு வேண்டிய வைணவ அன்பர் ஒருவர் வரவில்லை. தமிழார்வம் மிக்க அந்தச் சுவைஞர் வாராமை சுவாமிகளை வருத்தியது. இருவருக்கும் வேண்டிய நண்பரிடம் வினவி னார். 'ஏன் அவரைக் காணவில்லை?' என்றார்.

புலவர்கள் புகழ் கூறும் சுவாமிகள் தமிழ் கேட்க வைணவ பக்தருக்கு விருப்பம் என்றா லும் விரிவுரை நிகழிடம் முருகன் கோவில் என்பதால் அவரால் வரமுடியவில்லை. கந்த கோட்டம் என்று இன்று வழங்கப்பெறும் முருகன் ஆலயத்துள் அடியெடுத்து வைக்க, பழுத்த வைணவ பக்தரின் பலகாலப் பழக்கம் தடுத்தது. உள்ளன்பு இருப்பினும் உள்ளே வர தயக்கம் இருந்தது. 'முருகன் கோவிலாயிற்றே' என்கிற தடுமாற்றம் இருந்தது. இந்தத் தயக் கத்தை நண்பர் மூலம் வண்ணச் சரபம் தண்ட பாணி சுவாமிகள் வசம் தெரிவிக்கும்படி கூறி னார்.

செய்தி கேட்டதும் சுவாமிகள் கலகல என நகைத்தார். "பரமவைணவர் முருகன் கோவி லுக்குள் வரத் தயங்குகிறாரா? அதுசரி... அவர் கள் பெருமாள் உலகளந்தபோது கந்த கோட் டத்தைச் சேர்த்து அளந்தாரா? அதை மட்டும் விட்டுவிட்டு அளந்தாரா? பெருமானே உல களந்தபோது கந்த கோட்டத்திலும் அவர்கால் பட்டிருக்குமல்லவா? அதுவும் அவருக்குச் சொந்தம்தானே! பெருமானே உள்ளே வந்த போது பக்தரும் வரலாமே" என்று அன்போடு கேட்டு விட்டார். மறுநாள் முதல் இவரும் ஆஜராகி விட்டார்.

இப்படிப் பல மகான்கள் வாழ்வோடு தொடர்புடைய திருத்தலம் கந்த கோட்டம் என வழங்கப் பெறும் ஸ்ரீமுத்துக் குமார சுவாமி தேவஸ்தானம். ஸ்ரீமத் பாம்பன் சுவாமி கள், அருட்பிரகாச ராமலிங்க வள்ளலார் போன்ற அண்மைக்கால அருளாளர்கள் அருந் தமிழ் அபிஷேகம் பெற்றவன் கந்தகோட்ட முருகன்.

பிறந்த இடம் வேறு; புகுந்த இடம் வேறு என்று பெண் குழந்தைக்கு உண்டு. பாகவதக் கதையில், கம்சன் சிறைச்சாலையில் பிறந்த கண்ணன், நந்தகோகுலத்திற்கு இடம் பெயர்ந்து யசோதை மகனாய்ப் புகழ்பெற்ற வரலாறு உண்டு. நம் கந்தக் கோட்டக் கடவுள் கதையும் அப்படித்தான். இவன் திருப் போரூர்த் தெய்வம். திருப்போரூர் சிதம்பர சுவாமிகள் போன்ற அருளாளர்கள் சந்நிதி முறை இவனைக் குறித்துப் பாடினர்.

ஆனால் அப்போது நிலவிய பிறமத ஆதிக் கம் மற்றும் கோவில் கொள்ளைகள் காரண மாக வெளியேறி ஒளிந்திருந்து பிறகு கந்த கோட்டம் கண்டவன் நம் கந்தப் பெருமான். ஏறத்தாழ முந்நூறு ஆண்டுகட்கு முன்னர் ஆயிர வைசிய மரபினைச் சேர்ந்த பேரி செட்டியார் வழித் தோன்றிய மாரி செட்டி யார் தோளில் சுமந்து சென்னைக்கு முரு கனைக் கொண்டு வந்தார் என்பது வரலாறு.

அப்போது நிலவிய சூழலால் திருப்போரூர் முருகன் ஒளிக்கப்பட்டான். ஒரு வேப்ப மரத் தடியில் புதைத்து வைக்கப்பட்டான். கிருத் திகை தோறும் அவனை வழிபட்டு வந்த மாரி செட்டியாருக்கோ முருகனை வணங்காமல் உணவு கொள்ளவில்லை. கண்ணீர் விட்டுக் கதறி அழுதார். "கந்தா... கந்தா..." என்று கதறி னார். அவரிடம் "இந்தா... இந்தா..." என்று தன்னை வெளிப்படுத்தித் தந்தான் கந்தவேள். எப்படி!

# நலமோங்கு கந்தவேளே!

கந்தப் பண்டாரம் என்கிற பக்தருடன், மாரி செட்டியார் திருப்போரூர் சென்ற போது, ஒரு நாகவடிவில் வெளிப்பட்டு, தாம் எங்கு உறை கிறோம் என்று முருகன் உணர்த்தினார். அது மட்டும் அன்றி மாரிசெட்டியார் உடன் தாம் உவந்து செல்வதாக ஊரவர் கனவில் தோன்றி உறுதியும் கூறினார். மாரி செட்டியாருக்கு அப்படி என்ன மகிமை?

மிக உயர்ந்த தபஸ்வி ஸ்ரீ வக்ருவமகரிஷி. அவர் இல்லறத்தில் நாட்டம் இன்றி இருக்க, இறைவரே அவரை இல்லறத்தில் இருக்கப் பணித்தார். உத்தமியை மணந்து உயர்ந்த யாகாக்னி மூலம் ஆயிரம் மக்களை உண்டாக் கினார். அவரே ஆயிர வைசியர் என்பது மரபு. அவர்கள் அனைவரும் சில நெறி முறைக் கடங்கிய வாணிபம் செய்து வாழ்ந்தனர். செல்வச் செழிப்பால் இரவில் எழும் ஆதித்யர் என்ற சிறப்பும் பெற்றனர். பக்தியும் பண்பும் அவர் பரம்பரைச் சொத்து. அந்த வழியில் வந்த பெரியவர் மாரிசெட்டியார். எனவே கம்சன் சிறை விட்டு நந்தன் திருமாளிகை வந்த கண்ணனைப் போல இருப்போரூர் மறைவிடம் நீங்கி மாரிசெட்டி மடிமீது வந்தான் கந்தக் கடவுள்.

பாகவதத்தில் யமுனை வழிவிட்ட மாதிரி இவர் வருகிற வழியில் பொங்கிப் பெருகிய புயலும் ஆற்று நீரும் வழிவிட்டன என்பர் முன் னோர். பல்வேறு தலங்களைத் தரிசித்து அவர் கள் சென்னை வந்து தற்போதுள்ள இடத்தில் கந்தனுக்கு ஆலயம் கண்டனர். ஆயிரவைசிய அன்னையர் அன்புக் கொடையாலும், வேலூர் மாரிசெட்டியார் மனைவியாரின் பல்வேறு அணிகலன்களைத் தானமாய்த் தந்த தகைமை யாலும் கந்தகோட்டம் பெரிய கோயிலானது.

இன்றைக்குச் சென்னையிலேயே அதிக விலைமதிப்புடைய பூமி இந்தப் பகுதி. கிர வுண்ட் என்ன விலை என்று பேசும் பழக்கம் இங்கு இல்லை. சதுர அடி கூட இல்லை... சதுர அங்குலம் கூட அதிக விலை... அதிக வாடகை... ஒரு கடையை ஒருவர் மற்றவருக்கு விடுவதானால் பல லட்சங்கள் பகடி கேட்பார் கள். அப்படி தலம்-பூமி-ஓங்கிய விலைக்கு ஒரு காரணம் சொல்வார்கள் அமரர் வாரியார் சுவாமிகள்.

இந்தக் கந்த கோட்டத்து முருகன் மீது அருட்பிரகாச வள்ளலார் தெய்வ மணிமாலை என்ற நூலைப் பாடினார்கள். அப்படிப் பாடத் தொடங்கும்போதே 'திரு ஓங்கு' என்று தொடங்கி 'தலம் ஓங்கு கந்த வேளே' என்று பாடி அருளினார் கள். திரு ஓங்கு என்றதால் அப்பகுதியில் திரு - செல்வம் ஓங்கிற்று. தலம் ஓங்கு என்றதால் பூமி விலை ஓங்கிற்று என்பார்



வாரியார் சுவாமிகள். உண்மைதான்... ஞானிகள் வாக்குப் பொய்க்காதே!

இந்தக் கந்த கோட்டத்து முருகன்தான் வள்ளலார் வாழ்வில் திருப்புமுனை! பள்ளிக் கல்வியை வெறுத்து, பக்திக் கல்வியை விரும்பியவர் வள்ளலார். அவரது தமையனாரோ, பணம் ஈட்டும் விருப்பில் அவருக்கு உலகக் கல்வி கொடுத்து புராணபிரசங்கம் செய்ய வைத்து நாலுகாசு பார்க்க விரும்பினார். வள்ளலார் மசியவில்லை... பள்ளிக்கூடத்து முற்றத்தை வெறுத்து, கந்த கோட்டத்துக் கதவுகளைத் தட்டினார்.

''என்னை ஆண்டாறு மூன்றாண்டில் ஆண்டு கொண்ட'' என்ற வள்ளலார் வாக்கின்படி ஒன்பது வயதில் அவரை ஆட்கொண்டான் ஆண்டவன். தேன்மழை பெய்யும் திருவானாக அவர் நாவை ஆட்கொண்டு அருள் மழை பெய்வித்தான் ஆனந்த நாயகன்.

*"ஓதாமல் ஒரு நாளும் இருக்க வேண்டா;*
*ஒருவரையும் பொல்லாங்கு சொல்ல*
*வேண்டா"*

என்று வேண்டாம்... வேண்டாம் என்று கூட்டம் சேர்ந்து கூச்சல் போடும் பழைய பாடத்திட்டத்தைத் தம் பாட்டுத் திட்டத்தில் முறியடித்தார் வள்ளலார். 'அதுவேண்டாம் இதுவேண்டாம்' என்கிற பாட்டைப் படித்து எதிர்மறையாகப் பாடமே வேண்டாம் என்று பிள்ளைகள் முடிவு செய்துவிடும் காலம் அந்தக் காலம். வள்ளலாரின் ஆன்ம கல்விக் கூடத்தில் புதியபாட்டு 'வேண்டும் வேண்டும்' என்று வேண்டுதலோடு புறப்பட்டது!

*ஒருமையுடன் நினதுதிரு மலரடி*
*நினைக்கின்ற*
*உத்தமர்தம் உறவுவேண்டும்*
*உள்ஒன்று வைத்துப் புறமொன்று*
*பேசுவார்*
*உறவுகல வாமைவேண்டும்*
*பெருமைபெரு நினதுபுகழ் பேசவேண்*
*டும்பொய்மை*
*பேசா திருக்கவேண்டும்*
*பெருநெறி பிடித்தொழுக வேண்டும்மத*
*மானபேய்*
*பிடியா திருக்கவேண்டும்*
*மருவுபெண் ஆசையை மறக்கவே*
*வேண்டும்உனை*
*மறவா திருக்கவேண்டும்*
*மதிவேண்டும் நின்கருணை நிதிவேண்டும்*
*நோயற்ற*
*வாழ்வில்நான் வாழவேண்டும்*
*தருமமிகு சென்னையில் கந்தகோட்*
*டத்துள்வளர்*
*தலம் ஓங்கு கந்தவேளே*
*தண்முகத் துய்யமணி உண்முகச்*
*சைவமணி*
*சண்முகத் தெய்வமணியே.*

யார் உத்தமர்? இறைவன் திருவடி நினைப்பவர் உத்தமர்... அதிலும் அங்கும் இங்கும் அலைபாயாமல் ஒருமைப்பாட்டு உணர்வுடன் உள்ள உறுதி உடையவரே உத்தமர். அவர்தம் உறவு வேண்டும் என்றார். வாழ்வதும் வீழ்வதும் பெரும்பாலும் சகவாச தோஷம்தான் காரணம். எனவே சரியான நபரோடு சேர வேண்டும்.

"வேண்டும்... வேண்டும்'' என்று உடன் பாட்டு ரீதியில் பாட நினைத்த வள்ளலாருக்கு இரண்டாவது அடி பாடும்போதே சிக்கல் வந்துவிட்டது! "உள்ளே ஒன்று வைத்து வெளியில் ஒன்று பேசுகிற அயோக்கியர் உறவு'' என்று பாடிவிட்டார். எப்படி முடிப்பது? வேண்டாம் என்று முடிக்க வேண்டும்.... அப்படி எழுதினால் பிரதிக்ஞை என்னாவது? எனவே "உள் ஒன்று வைத்துப் புறம் ஒன்று பேசுவார் உறவு கலவாமை வேண்டும்'' என்று ஒரு அடி அடித்தார்.

"பெருமைமிக்க உன் புகழே பேச வேண்டும். பொய் பேசாது இருக்க வேண்டும். பெருமை மிக்க வழியில் செல்ல வேண்டும். மதம் என்னும் பேய் பிடியாமல் இருக்க வேண்டும். வந்து தழுவும் விலை மகளிர் ஆசையை மறக்க வேண்டும். இறைவா உன்னை மறவா திருக்க வேண்டும். அறிவு வேண்டும். உன் கருணையாகிய செல்வம் வேண்டும். நோயில்லாத வாழ்வில் நான் வாழ வேண்டும்'' என்று வேண்டுகோளை விவரித்தார்.

இந்தப்பாட்டில் 'தருமமிகு சென்னை' என்பதை நம்புவது பலருக்கு முடியாத விஷயம். அப்போது தருமம் சென்னையில் இருந்திருக்கலாம்... என்பர் சிலர். அப்படியல்ல இறைவன் தருமம் உள்ள இடத்தில் தானே இருப்பார். அதுமட்டுமல்ல... அவர் உள்ள தலம் ஓங்கும் என்றார். இன்றைக்கும் மிகச் சிறந்த நிர்வாகச் சிறப்பால் மிளிர்கிறது இத்திருத்தலம்.

விலை உயர்ந்த பூமிப் பரப்பானாலும், இங்கு மூச்சுவிடக் கூட முடியாத காற்றுப் பஞ்சம் இருப்பினும், கந்த கோட்டத்து உள்ளே வந்தால் பெரிய திறந்தவெளி, இந்தப் பகுதியின் சுவாசப் பையாகத் திறந்து கிடக்கிறது! அது தான் திருக்கோவில் தெப்பக் குளமான சரவணப் பொய்கை. முருகப் பெருமான் தெப் போற்சவம் கொள்ளும் திருக்குளம்.

திருக்கோவிலுக்கு முன்பெல்லாம் தல வரலாறு புத்தகமாக வெளியிடுவது வழக்கம். கந்த கோட்டம் பற்றிய அருமையான ஆராய்ச்சியை இசைச் சித்திரமாக்கி ஒலிநாடாவில் வழங்கியுள்ளார் தஞ்சைவாணன்.

# குடை: ஐடியா நன்கொடை!

ஒரு மழை நாளில் மூளையைக் குடைந்ததில் சில புது டிசைன் குடைகளுக்கு ஐடியா கிடைத்தது.

கற்பனை : மௌஷ்மி

## ஸ்கிரீன் குடை

பட்டனை அழுத்தினால் திரை விழும். பஸ், லாரி, கார் எத்தனை தண்ணீரை வாரி அடித்தாலும் பலமான தார்பாலின் திரை காக்கும்.



## டூ - இன் - ஒன் குடை

பார்த்தால் நீண்ட தடி. பட்டன் தட்டினால் குடை. தெருவில் மழை நீர்த் தேக்கத்தை ஆராய உதவும்.




## எலெக்ட்ரானிக் கண் குடை

(வீட்டு ஓனர் போன்ற பிடிக்காதவர்களை ஒதுக்க...)




## உடன்பிறவா சகோதரி மாடல்

(காதலர்களுக்கும் வசதிதான்)



## படகுக் குடை

நவீன ரப்பரில் லைஃப் போட் மாதிரி விரியும்.



இரண்டாம்தர விஞ்ஞானி என்றும் பெண்களை நிர்வாணமாகப் பார்ப்பதற்கே அவரது கண்டுபிடிப்பு பயன்படும் என்றும் சிலர் அவரை மறைமுகமாய்க் கேலி செய்தார்கள். ஆனால் அவர் அதைப் பெரிதாக எடுத்துக் கொள்ளவில்லை.

அவரது சாதனைக்கு 1901ல் நோபல் பரிசு கிடைத்தது. அத்துடன் கிடைத்த சன்மானத் தொகையை அவர் ஏற்றுக் கொள்ளவில்லை. அவ்வளவு பணத்தையும் மக்களின் நலனைக் கருதி விஞ்ஞான வளர்ச்சிக்காக பல்கலைக் கழகத்திற்குக் கொடுத்து விட்டார்.

அவர் விரும்பியிருந்தால் தமது கண்டுபிடிப்பின் உரிமையைத் தனியார் நிறுவனங்களுக்கு விற்று கோடிக்கணக்கில் பணம் சம்பாதித்திருக்கலாம். ஆனால் அவர் அப்படியெல்லாம் ஆசைப்படவில்லை. மிக எளிமையாகவே வாழ்ந்தார். முதல் உலகப் போர் முடிவில் தம் தேவைகளுக்குக் கூட பணமில்லாத வறுமை நிலையில் மாண்டு போனார்; 'வில்ஹெம் கான்ராட் ராஞ்ஜன் (W.C. Roentgen), எக்ஸ்ரேயைக் கண்டு பிடித்த விஞ்ஞானி. 1895-நவம்பரில் கண்டுபிடித்தார். சரியாக நூறு ஆண்டுகள் ஆகி விட்டன!

அவரது மகத்தான கண்டுபிடிப்பை கௌரவிக்கும் வகையில் தபால் தலைகள் வெளியிடப்பட்டன.



ராஞ்ஜனின் வாழ்க்கை ஒரு சுவையான கதை : இளமையில், பல்கலைக் கழகத்தில் இடம் மறுக்கப்பட்ட நிலையில், சாதாரண பாலிடெக்னிக்கில் சேர்ந்து படித்தார். இருந்தாலும் அவரது ஆராய்ச்சி உத்வேகம் குறையவில்லை.

வாயு அடைக்கப்பட்ட குழாயில் உச்ச மின்சாரத்தைச் செலுத்தும் போது என்ன நிகழ்கிறது என்பதை ஆராய ஆர்வமாய் இருந்தார். அப்போது எதிர்பாராதவிதமாக அதிலிருந்து ஒருவகை அமானுஷ்ய கதிர்கள் வெளிப்பட்டு, மேஜை மீது சன்னமான வெளிச்சத்தை ஏற்படுத்தின. ஒரு புகைப்படத்தை கனமான அட்டையால் மறைத்து வைத்த போதும் இந்தக் கதிர்கள் அதை ஊடுருவி, புகைப் படம் கறுத்துப் போயிற்று.

இக்கதிர்களின் இயல்பு முழுமையாகப் புரியாத நிலையில் அவற்றுக்கு 'X' கதிர்கள் என்று ராஞ்ஜன் பெயர் வைத்தார்.

தம் மனைவியின் கையைப் புகைப்படத் தட்டின் மீது (பிலிம்) வைக்கச் சொல்லி அந்த விசித்திர கதிர்களை செலுத்தினார். பிறகு படத்தை டெவலப் செய்து பார்த்த போது, கை எலும்புகளும் அணிந்திருந்த மோதிரம் மட்டுமே தெரிந்தன. இதுதான் உலகத்திற்கு அறிமுகமான முதல் எக்ஸ்ரே!

இதன் பிறகு பல

# ராஞ்ஜன்



விஞ்ஞானிகள் படிப் படியாக ஆராய்ச்சி செய்து எக்ஸ்ரே முறையைப் பக்குவப்படுத்தியிருக்கிறார்கள். ஆனால் ஆரம்ப நாட்களில் அதற்கு அவர்கள் கொடுத்த விலை மிக அதிகம் - தீவிரமாக எக்ஸ்ரே ஆராய்ச்சியில் ஈடுபட்டவர்களுக்குச் சரும நோய்களும் அல்சர்



# கேலிக்கு ஆளான விஞ்ஞானி!

...போன்ற இயந்திரங்களும் வந்தன.

'டியூமர்' என்கிற ஒருவகை கான்சரை எக்ஸ்ரே செலுத்தி குணப்படுத்தலாம் என்று தெரியவந்ததும் அதே சிகிச்சை முறையை வேறு சில நோய்களுக்கும் கடைப்பிடிக்க ஆரம்பித்தார்கள். அதன் விளைவாக பத்து லட்சம் பேர் கான்சர் வந்து இறந்து போனார்கள்!

டாக்டர் ஹெர்மன் ஜி. மார்ச் என்பவர், அதிகப்படியான எக்ஸ் கதிர்கள், மனித உடல் அணுக்களின் குரோமோஸோம்களை நேரடியாக பாதிக்கக்கூடியது என்பதை ஆதார பூர்வமாக நிரூபித்தார். அதன் பிறகே பாதுகாப்பு நடவடிக்கைகள் எடுக்கப்பட்டன.

நோயாளிகள் உடலில் வாங்கும் ஒவ்வொரு ஆயிரம் மில்லிரம்ஸ் கதிர்களுக்கும் இரண்டிலிருந்து பதினைந்து நாள் வரை ஆயுட்காலம் குறைகிறது என்று ஒரு ஆராய்ச்சி குழு கருதுகிறது. ஒருவர் வாழ்நாளில் பதினைந்து மார்பு எக்ஸ்ரே எடுத்துக் கொண்டால் இந்த அளவை சுலபமாய் எட்டி விடலாம்!

இவை தவிர, ஒருவர் அடிக்கடி ஐ.வி.பி., ரீனல் ஆன்ஜியோகிராம் போன்ற எக்ஸ்ரேக்களை எடுத்துக் கொள்வாரேயானால், அவருக்கு மலட்டுத்தன்மை ஏற்பட வாய்ப்பு இருக்கிறது. பெண்களுக்கு இதன் பாதிப்பு ஆண்களுடன் ஒப்பிடும் போது இரண்டு மடங்காக உயர்கிறது. கருவுற்ற பெண்களானால் கருச்சிதைவு கூட உண்டாகலாம். குழந்தைகளுக்கும் எக்ஸ்ரேக்களால் பாதிப்பு அதிகம்.

எக்ஸ்ரே பகுதியில் வேலை பார்ப்பவர்களுடைய உடலில் அதிகப்படியாக வாங்கக்கூடிய எக்ஸ்ரேக்களின் உச்ச வரம்பு ஐந்நூறு மில்லிரம்ஸாக நிர்ணயிக்கப்பட்டுள்ளது. இதனால் வருடத்திற்கு இவர்களுக்கு ஒரு மாத காலம் கட்டாய விடுப்பு அளிக்கப்படுகிறது. பிரிட்டனிலும் அமெரிக்காவிலும் அரசாங்கம் இத்தகைய கதிர்களால் மக்களுக்கு நேரும் வீணான கேடுகளை குறைக்க போதிய பாதுகாப்பு நடவடிக்கைகளை எடுத்து வருகிறது.

ஆனால் இங்கு அப்படி இல்லை!

இத்தனை அபாயகரமானதாக இருப்பினும் எக்ஸ்ரேயை உபயோகப்படுத்துவதற்கு என்ன காரணம்?

காசநோய், இருதய நோய், ரத்தக் குழாய் அடைப்பு சிறுநீரகக் கல் அடைப்பு ஆகியவற்றை எளிதில் எக்ஸ்ரே படம் எடுத்துப் பார்த்து விட முடிகிறது. இன்னும் விரிவாகப் பார்ப்பதற்கு சி.டி. ஸ்கேன் என்ற பிரம்மாண்டமான நவீன இயந்திரத்தில் பயன்படுவதும் எக்ஸ்ரேதான். உபாதையின் தன்மையும் அது நிலைகொண்டுள்ள இடமும் துல்லியமாகத் தெரிவதால், சிகிச்சை அல்லது ஆபரேஷன் செய்வது சுலபமாகிறது.

மருத்துவத் துறையில் மட்டுமின்றி பொறியியல் துறையிலும், வெல்டிங் முடிந்த பிறகு எங்கேனும் விட்டுப் போயிருக்கிறதா என்று பார்க்கவும், துவாரங்கள் ஏதேனும் இருக்கிறதா என்று உலோகக் குழாய்களை பரிசோதிக்கவும் எக்ஸ்ரே உதவுகிறது. எக்ஸ்ரேயைக் கண்டுபிடித்த போது ராஞ்ஜன் அதற்கு இத்தனை உபயோகங்கள் இருக்கக்கூடும் என நினைத்திருப்பாரா...? சந்தேகம்தான்!

**- மதுமனோ**

